உ

சிவமயம்.

யாழ்ப்பாணத்து வேலணையூர்,

# பேரம்பலப் புலவர் நினைவு மலர்.

புலவரவர்களுடைய தௌகித்திரரும்,

மூளாய் சைவப்பிரகாச வித்தியாசாலைத்

தலைமை ஆசிரியருமாகிய

பண்டிதர் திரு. கா. பொ. இரத்தினம்

அவர்களால் வெளியிடப்பெற்றது.


நாவலர் அச்சுக்கூடம்,

யாழ்ப்பாணம்.

1935.

திருச்சிற்றம்பலம்.

# முன்னுரை.

கண்ணுதல் தந்தமுக் கண்ணன் மலரடி
மண்ணக மாந்தர் எண்ணிடி னாளும்
வேண்டிய வேண்டியாங் கெய்து வரீண்டே.

இம்மலர், அறிஞர் சிகாமணிகளால் புலவரெனப் போற்றப் பெற்றவரும், பல செய்யு ணூல்களின் ஆசிரியரும் எமது தாயாரின் தந்தையாரும், வேலணையூர் சைவப் பெருங் கிழாருமாகிய ஸ்ரீமத். கோ. பேரம்பலப் புலவர் அவர்கள் இறந்த முப்பத்தோராம் நாளாகிய யுவயாண்டு ஐப்பசித்திங்கள் கஅ-ம் நாள் அந்தியேஷ்டி நிகழ்வதாக, அந்நாளில் புலவரவர்களின் நினைவுக்குறியாக வெளியிடப் படுகின்றது.

இம்மலரில் புலவர் அவர்களுடைய சரித்திரமும், புலவரவர்களியற்றிய நூல்களிரண்டும், பேரம்பலப்புலவர் பதிகமும், புலவரவர்களின் பிரிவைக் குறித்து அறிஞர்கள் பாடியனுப்பிய செய்யுள்களும் அடங்கியுள்ளன. செய்யுள்கள் எல்லாம் கிடைத்த முறைப்படி வெளியிடப்பட்டன. பண்டிதர் திரு. மு. நல்லதம்பி அவர்களுடைய செய்யுள்கள் மிகவும் பிந்திக் கிடைத்தமையால் அவருடைய பெயரைப் பாடினோர் என்பதன் கீழ் இடமுடியாததாயிற்று.

இம்மலரை அலங்கரித்தற்குச் செய்யுள்களனுப்பியும், மதிப்புரை, அணிந்துரை தந்தும் உதவிய அறிஞர்கள்

எல்லோருக்கும், அழகுற அச்சிட்டுத் தந்த நாவலர் அச்சுக்கூட அதிப ரவர்களுக்கும் எமது நன்றி உரியதாகுக.

"எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப இவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு"— தமிழ்மறை.

"கணேசவாசம்"
வேலணை,
யுவ - ஐப்பசி - கரு.

இங்ஙனம்,
கா. போ. இரத்தினம்.

திருச்சிற்றம்பலம்.



# முகவுரை.

திருநெல்வேலிச் சைவாசிரிய கலாசாலைத்
தலைமைத் தமிழ்ப் பண்டிதர்
ஸ்ரீமத். சி. கணபதிப்பிள்ளை அவர்கள்
எழுதியது.

---

இந்த நூற்றாண்டில் உண்மையான தமிழ்ப்படித்தவர்கள் பிறக்கவில்லை; அன்றி, உண்மையான தமிழ்ப்படிப்புக்கு மரியாதை செய்வதுமில்லை. இதனாலே, முதியோர்களான அறிஞர்கள்சிலர் இந்த நூற்றாண்டில் இலைமறைகாய்போல வாழ்ந்துவந்தார்கள்; வருகின்றார்கள். இந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் ஸ்ரீமத் பேரம்பலப் புலவர் அவர்கள்.

இவர்கள் சைவத்துக்கும் தமிழுக்குமிருப்பிடமான வேலணையிற் பிறந்தவர்கள். இவர்களைப்பற்றி, இற்றைக்குப் பதினைந்து வருடங்களுக்குமுன், வித்துவசிரோமணியாகிய சுன்னாகம் ஸ்ரீமத் அ. குமாரசுவாமிப் புலவர் அவர்கள் பேசியதுண்டு. புலவர் அவர்கள் முதியர்களான அறிஞர்களைப் பற்றி அடிக்கடிபேசுவது வழக்கம்.

புலவர் அவர்கள் சிவபதமெய்தியபின்—அவர்களுக்குக் கீழ் வாழும் வாழ்க்கையை இழந்தபின்— அவ்வளவில் நில்லாமல் ஒரு தராதரப்பத்திர உபாத்தியாயர் ஆனபின்—சென்ற வாரம் வரையில் ஸ்ரீமத் பேரம்பலப்புலவர் அவர்களைப்பற்றி யான் கேள்விப்பட்டதில்லை. அது பேரம்பலப்புலவர் அவர்களின் குறை யன்று; எனது குறையே. யாழ்ப்பாணத்தின் குறையெனினும் இழுக்காது.

ஸ்ரீமத் அ. குமாரசுவாமிப்புலவர் அவர்கள் எந்தக்கால த்தில் சிவ பதமெய்தினார்களோ, அந்தக்காலத்திற்றான் பேரம் பலப்புலவர் அவர்களும் சிவபத மெய்தி யிருக்க வேண்டு மென்று எண்ணியிருந்தேன். ஆனால், சென்றவார ஈழ கேசரியில் உண்மை வெளிவந்தது. உண்மையான தமிழபி மானிகள், தமிழுக்கு மரியாதை செய்கிறவர்கள் இங்ஙனம் முதியதமிழ் அறிஞர்கள் ஒருபுறம் ஒதுங்கி மறைந்து வாழ்ந்து வந்ததை—வாழ்ந்து வருவதைக் குறித்துக் கண்ணீர் விடாமலிருக்கமுடியாது. இது யாழ்ப்பாணத்துக்கும் பெரிய தொரு வெட்கம். இது நிற்க;

சிவபத மெய்திய நமது பேரம்பலப்புலவர் அவர்கள் செய்யுள் செய்வதில் திறமை படைத்தவர்கள். அது வண்ணைச் சிலேடை வெண்பா, இரட்டைமணிமாலை என்னும் இந்நூல்களால் இனிதுவிளங்குகின்றது. இரட்டைமணி மாலை அக்காலத்து அறிஞர்கள் பலரால் பாராட்டப்பட்டி ருக்கின்றது. சிலேடை வெண்பாப் பாடுதற்கு எத்துணைச் சொல்லாட்சிவேண்டு மென்பது கலைசைச்சிலேடைமுதலிய சிலேடைகளில் பயின்றார்க்கு நன்குபுலப்படும். புலவர் அவர்கள் இந்நூல்க ளன்றி, கடம்பசந்தாதிஎன்னும் ஒரு பிரபந்தமும், பலவேறுதனிச் செய்யுள்களும் செய்திருப்ப தாக அவர்கள் சரித்திரத்தில் தெரிகிறது.

புலவர் அவர்களின் ஞாபகார்த்தமாக, இரங்கற்பாக்களை வெளியிடுதன்மாத்திரை யோடமையாது, அவர்களுடைய புகழுடம்பு என்றும்நின்று நிலவுதற் பொருட்டு, அவர்களி யற்றிய அரிய இரு நூல்களை நூல்முகப்பில் அவர்கள் சரித் திரத்தை அமைத்தும், இரங்கற்பாக்களைப் பின்னுக்குச் சேர்த்தும் அழகுற அச்சிட்டவர்கள், புலவர் அவர்களுடைய

தௌகித்திரர் பண்டிதர் ஸ்ரீமத் கா. பொ. இரத்தினமவர்கள். பண்டிதர் அவர்கள் ஆண்டில் இளைஞராயினும் அறிவில் முதியர்; புலவர் அவர்களின் குடியைவிளக்குங் குன்றாவிளக்கு.

பண்டிதர் அவர்களின் விடாமுயற்சியும் முன்னோர் பால்வைத்திருக்கும் அபிமானமும் பெரிதும் பாராட்டற்பாலன. அவர்கள் இந்நூல்களை வெளியிட்டது போலவே, புலவரவர்களியற்றிய கடம்பரந்தாதி என்னும் நூலையும், மற்றையதனிச் செய்யுள்களையும் அச்சிட்டுவிரைவில் வெளியிடுமாறு எல்லாம் வல்ல இறைவன் திருவருள்புரிவாராக.

திரு. சை. ஆ. கலாசாலை, இங்ஙனம்,
யுவ ஹூ ஐப்பசி மீ கடுவ. சி. கணபதிப்பிள்ளை.



# அணிந்துரை.

உயர்திரு சுவாமி உருததிரகோடீசுவரர் அவர்கள் எழுதியது.

மேற்றிசையினர் தம்முடைய அரும்பெறற் புலவர்களைப் போற்றிவருதல்போல், அரும் பெரும் தமிழ்ப் புலவர்தம் நினைவு அழியாமல் இருக்குமாறு அவர்தம்மைப் போற்றிக் கொண்டாடும் வழக்கம் தமிழ்மொழிவளர்ச்சியையும் நாட்டின் உயர்ச்சியையுங் கருதி உள்ளக்கிளர்ச்சியுடன் செய்யப்படுந் தொண்டுகளில் ஒன்றுதல் வேண்டு மென்பது இஞ்ஞான்றைய தமிழ்மக்களில் பேர் அறிஞர் ஒருசிலரால் மிகுதியாக உணரப்படுகின்றது.

இவ்வுணர்ச்சியால் தென் இந்தியத் தமிழ்மக்கள் திருவள்ளுவர் திருநாள், ஒட்டக்கூத்தர் திருநாள் என்றின்னன சிறப்புடன் கொண்டாடுதலைத் தங்கடமையாகக் கொண்டிருக்கின்றனர். யாழ்ப்பாண நாட்டிலும் திருவள்ளுவர் திருநாள், ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் குருபூசை என்பன சில இடங்களில் கொண்டாடல் செய்யப்படுகின்றன. நல்லைச் சின்னத்தம்பிப்புலவரது இரண்டாம் நூற்றாண்டு விழாவும் நிகழவிருக்கின்றது.

இம்முறையில், யாழ்ப்பாணத்து வேலணையூரின்கண் பிறந்து, ஒழுங்கான பழையமுறையில் செந்தமிழ் நூல்களைக் கற்று, தாம் அடைந்த நற்புலமையால் "வேலணை இலந்தைக் காட்டுச் சித்திவிநாயகர் இரட்டைமணிமாலை" "வண்ணைச் சிலேடை வெண்பா," "கடம்பராந்தாதி" என்றித் திறத்தனவாய பிரபந்தங்களை ஏனைய நல்லிசைப்புலவர் வியந்திடுமாறியற்றி, "கவிதைபாடும் புலவன்" எனச் சுன்னாகம் குமார

சுவாமிப்புலவரால் சிறப்பிக்கப்பெற்று, சென்றதிங்களில் தமது எழுபத்தைந்தாம் ஆண்டில் சிவபெருமான் திருவடிப் பேறெய்திய திரு. கோ. பேரம்பலப்புலவரது நினைவுக் குறி யாக இந்நூல் வெளியிடப்படுவ தாகின்றது. இதன்கண், அப் பெற்றியார்செய்த பிரபந்தங்களோடு, அன்னார்மீது அன்புடை யராய மற்றைய செந்தமிழ்ப் புலவர் சிலரால் பாடப்பட்ட கையறுநிலைச் செய்யுட்களுந் திரட்டப்பட்டுள. இவ்வுலக வாழ்வினை ஒருவிச் சென்ற செந்தமிழ்ப் புலவர் ஒருவரு டைய நினைவின் அடையாளமாக வெளிவரூஉம் இந்நூல் தன்னால் அவர்தம் மாண்பைத் தமிழுகம் நன்கு அறியலாகும்.

தமிழ்ப் பெருமுதியாராகிய அப்புலவர்தம் மகளார்திரு வயிற்றிற் பிறந்த எந்தம் இளைய நண்பர் பண்டிதர் கா. பொ. இரத்தினத்தார், அப்புலவர் பாலே சிறந்த தமிழ் இலக்கிய இலக்கண நூல்கள் சிலவற்றைத் திருத்தமாகக் கற்பாராயினரென்பதை யறிந்துபெரிதும் மகிழ்உறுகின்றேம். இப்பண்டிதர், அப்புலவர் பெரியார் தமக்குச் செய்த நன் மையை மறவாது, தமிழ் மொழியில் தமக்குள்ள பேர் ஆர்வத்தினால்தமிழ்பயிலும்மாணவர் பொருட்டுத்தாம் முதன் முதலாக இயற்றி வெளியிட்ட பாஷையும் வியாசமும் அடங்கப்பெற்ற "பயிற்சிமாலை க-ம்மலர்" என்னும் பயன் விளைக்கும் ஒருசிறு நூலை அன்னார்க்கே உரிமை யாக் கினமை புலவர் பெருமக்களால் மெச்சிடற்பாற்றே. இந் நூல் வெளிவருவதூஉம் இவர்தம் புலமையினாலும் முயற் சியினாலுமேயாகும்.

கலாநிலையம், யாழ்ப்பாணம்,
31-10-1935.

உருத்திரகோடீசுவரர்.



# பேரம்பலப் புலவர் சரித்திரம்.

புலவரவர்களின் மாணவரொருவர்

எழுதியது.



திருச்சிற்றம்பலம்.

## புலவரவர்கள் அவதாரஞ் செய்தநாள்.

### வெண்பா.

ஏரா ரவுத்திரிக்தை யேயிருபத் தொன்றுவெள்ளி
சீரா ரிடபநற் சித்திரை நாள்——நாராரெங்
கோனு மலையருளே கோதில்பே ரம்பலவேள்
மாணு னிலத்துதித்தான் வந்து.



## புலவரவர்கள் சிவபத மடைந்த நாள்.

### வெண்பா.

ப்ன்னுயுவ கன்னி பதினெட்டாங் தேதிவெள்ளி
முன்னுதிதி சத்தமியின் மூலநாள்——மன்னுமருள்
எந்தைகுரு பேரம் பலவ னிறைவனடி
சிந்தை மகிழ்ந்துற்றனனே சென்று.

——புலவரவர்களின் கனிஷ்ட புதல்வர் சொல்லியன.

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

# பேரம்பலப் புலவர்

## சரித்திரம்.

ஈழநாட்டிலே யாழ்ப்பாணத்து வேலணை யூரிலே வேளாளர் குலத்திலே கல்வி அறிவு ஒழுக்கங்களிலும் குருலிங்க சங்கம பக்தியிலும் சிறந்த கோணமலையென் பவர் ஒருவரிருந்தார். அவர் சேதுகாவல முதலியார் வழித்தோன்றிய சிவகாமி யம்மையாரை மணந்து இல் லறத்தினை இன்புடன் நடாத்தி வருநாளில், நான்கு புத் திரிகளும் ஒரு புதல்வனும் பிறந்தனர். தந்தையார் அப் புதல்வனுக்குத் தாமோதரம்பிள்ளையென நாமகரணஞ் செய்து, உரிய பருவத்திலே வித்தியாரம்பமுஞ் செய்வித் தனர். தாமோதரம்பிள்ளை தந்தையாருக்குப் பேரின்ப முண்டாகும்படி, பல கலைகளையும் கிரமமாகக் கற்றுவந்த னன் கற்றுவருநாளிலே அவன் தனது பன்னீராண்டில் சுரநோயினால் உயிர் நீத்தனன்.

தம் அருமைப் புதல்வனை யிழந்த தந்தையார் துக் கம் மிக்கவராய்த் தல யாத்திரை செய்யப் புறப்பட்டு, இராமேசுவரம் முதலிய புண்ணிய தலங்களை வணங்கிச் சென்று, சிதம்பரத்தை யடைந்து, வேண்டுவார் வேண்டு வதை ஈந்தருளும் சபாநாதரை வணங்கி, "எம்பெரு மானே! அன்பர்களுக் கன்பனே! அடியேன் என் பெறற் கருந் தவமணியை யிழந்து வருந்துகின்றேன்; அவனை

மீளவும் எனக்குத் தாராயாயின் தேவரீருடைய சந்நிதானத்திலேயே உயிர் நீப்பேன்" என்றுரைத் துறுதி செய்து, அத்தலத்தோர் பாங்கரிலிருந்து, அரிய நோன்பினைப் புரிந்தார். அங்ஙனம் அவர் நோன்பு புரியத் தொடங்கிய பதினைந்தாம் நாளிரவிலே சபாநாதர் அந்தணர் வடிவுடன் அவர் கனவிற் றோன்றி, "அன்பனே! உனது பிள்ளை உனது அறுபதாம் வயசிலே உன்னிடம் வருகுவன்; அவனுக்குப் பேரம்பலமெனப் பெயரிட்டழைக்குதி; அவனால் உன்னுடைய குலத்துக்குப் பெருங் கீர்த்தியுண்டாகும்." எனத் திருவாய் மலர்ந்து மறைந்தருளினார்.

உடனே தந்தையார் துயினீங்கி யெழுந்து தாம் கண்டது கனவோ? நினைவோ? எனக் கலங்கித் தெளிந்த உள்ளத்தினராய்ச் சபாநாதர் சந்நிதானத்தை யடைந்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரம்பண்ணி எழுந்து நின்று, கைகளிரண்டுஞ் சிரமேற் குவிய, உடல் நடுங்க, மெய்ம்மயிர் சிலிர்ப்ப, நெஞ்சம் நெக்குருக, ஆனந்தவருவி சொரிய, ஆனந்த பரவசராய் பரங்கருணைத் தடங்கடலாகிய பார்வதி சமேதரை வாயார வாழ்த்தித் துதித்து வழிபட்டுத் திருக்கோயிலை வலஞ்செய்து, எம்பெருமானைப் பிரிய மனமிலராய்ப் பின்னுமோர் மண்டல கால மாங்கிருந்து சுவாமிதரிசனஞ் செய்து பின் தமதூருக்கு வந்தார்.

வந்தவர் தமக்கு வரமீந்த திருவருளின் திறத்தினைத் தமது சுற்றத்தார், அயலார், ஊரார், அன்பர் யாவர்க்கும் வியந் துரைத்திருக்கு நாளிலே திருவருட் குறிப்பின்படி 1859-ம் ஆண்டுக்குச் சரியான ரௌத்திரி வருடத் தைமாத உகம் நாளாகிய வெள்ளிக்கிழமை

இடப லக்கினம் பொருந்திய சுபவேளையிலே புலவர் பெருமான் திருவவதாரஞ் செய்தார். தந்தையார் இவருக்குப் பேரம்பலமென நாமகரணஞ் செய்து அன்னப் பிராசனம், செளளம் என்கிற கருமங்களையும் உரிய காலங்களிலே மிகுந்த சிறப்போடு செய்வித்தனர். அப்பால் ஐந்தாமாண்டிலே அட்சராரம்பமுஞ் செய்வித்து வேலணை அமெரிக்க மிஷன் பாடசாலையில் (A. M. School) கல்வி பயில வைத்தனர். பாடசாலையில் கல்வி பயிலும்பொழுது இவர் திறமையை வியவாதார், நயவாதார், போற்றுதார் ஒருவருமில்லை.

இவர் தம்முடைய இளமையிலே செய்யுள் செய்யும் ஆற்றல் கைவரப் பெற்றவராயிருந்தார். பன்னீராண்டில் ஏழாம் வகுப்பில் படிக்கும்பொழுது தமது உடன் மாணவரும் பின்னர் சோதிடசாகரராயும் பிரபல புகையிலை வியாபாரியாராகவும் விளங்கிய ஸ்ரீமான் சாந்தலிங்கப் பிள்ளை யவர்களிடத்திலுள்ள அகராதியைப் பெறவிரும்பி

"சாந்தலிங்கமென்றிச் சகம்புழிச்ச வாழ்வுகூர்
சாந்தலிங்க சோதிடநற் சாகரமே—ஓர்ந்தும்
அகராதி தன்னை யனுப்புஞ் சிலசொல்
தகவாக நானுணரத் தான்"

எனுமிவ் வெண்பாவைப் பாடியனுப்பினர்.

அக்காலத்து மிஷன் பாடசாலைத் தலைமை யாசிரியராயிருந்த இலக்கண இலக்கிய வித்துவான் ஸ்ரீமான். கனகசபைப்பிள்ளை யவர்கள் இவருடைய ஒப்புயர்விலாக் கல்வித் திறமையையும், விவேகத்தையும் நன்குணர்ந்தவராய் ஏழாம் வகுப்பில் சித்தியடைந்தபின் இவரை வலிந்தழைத்து நிகண்டு, பாரதம், நைடதம், நன்னூல் விருத்

தியுரை முதலியவற்றைக் கற்பிக்க இவருந் திறமையுடன் கற்றுவந்தனர். இக்காலத்தில் இவரியற்றிய தனிச் செய்யுள்கள் பல.

அப்பால் தந்தையார் இவரை ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்களின் மாணுக்கரும், வேலணைச் சைவப்பிரகாச வித்தியாசாலைத் தாபகரும், சைவ சித்தாந்த சாகரமுமாகிய ஸ்ரீமத் வி. கந்தப்பபிள்ளை எனும் பெரியாரிடத்தில் கல்வி பயில வைத்தார். இவர் அவரிடத்தில் தேவார, திருவாசக, புராணேதிகாச, இலக்கண, காவிய, சித்தாந்த நூல்களைச் சந்தேகவிபரீதமறக் கற்றுத் தெளிந்தார். பின்னர் சோதிடமுங் கற்க விரும்பி அக்காலத்துச் சோதிட வாசிரியராக விளங்கிய ஸ்ரீமான் குமாரு என்பவரிடத்தில் கற்றனர்.

பின்னர் அக்காலத்துச் சிறப்புடன் வாழ்ந்த நொத்தாரிஸ் (Notary Public) ஸ்ரீமான் முருகேசு அவர்கள் இவரைத் தமக்கோர் எழுத்தாளராக (Clerk) விருக்கும்படி கேட்க இவரு மதற்கியைந்து அவருடனும் பின்னும் சிலருடனும் எழுத்தாளராய்க் கடமையாற்றினர். இக்காலத்தில் இவருடைய நேர்மையும் எழுதும் வன்மையும் யாவராலும் போற்றப்பட்டன. இவருடைய புலமையை அறிந்த பலர் இவரையண்மிச் சரமகவிகள் வாழ்த்துக் கவிகள் செய்து தருமாறு நெருக்குவது வழக்கம். இவரும் தமது ஒய்வு நேரம் முழுவதையும் அவர்கள் பணியை நிறைவேற்றுவதிலும் தமிழாராய்வதிலும் கழித்து வந்தார். சில்லாண்டுகளின் பின் எழுதுந் தொழிலை விட்டு வேளாண்தொழிலைச் சிறப்பாய்ச் செய்விப்பதிலும் தமிழ் நூல்களைச் செய்வதிலும், பாடஞ் சொல்வதிலும், ஊரை நன்னிலைப்படுத்துவதிலும் காலங்கழித்தனர்.

அக்காலத்தில், ஏர்வளத்தாலுயர்ந்த வேளாண் குலதிலகராகிய முருக உடையார் வழித்தோன்றிய ஆறுமுகம் என்பாரின் மகள் பெரியநாச்சிப்பிள்ளை என்னுமம்மையாரை முதற்றாரமாகவும், காராளர் குல தீபமாகிய குமாரவேலு உடையார் வழித்தோன்றிய வேலாயுதர் என்பாரின் மகள் வள்ளியம்மைப் பிள்ளை என்னுமம்மையாரை இரண்டாந்தாரமாகவும் மணந்து சபாரத்தினம், கனகரத்தினமெனுமிரு புதல்வர்களையும் மூன்று புதல்விகளையும் பெற்றார்.

அரசினராலும் உலகத்தவராலும் கைக்கூலி வாங்காப் பெருந்தகையரென்று புகழ்ப்பெற்றவரும், கல்வியறிவொழுக்கங்களால் மிக்கவரும், சிவபக்தி அடியார் பக்திகளிற் சிறந்தவரும், தீவுப்பற்று மணியகாரருமாகிய ஸ்ரீமான் வி. முத்தையாபிள்ளை அவர்கள் இவருடைய புலமையையும் ஒழுக்கத்தையும் நன்கறிந்து, இவரைத் தமது ஆஸ்தான வித்துவான் போலப் போற்றி வந்ததுமன்றி அரிய காரியங்களையும் இவருடன் கலந்து யோசித்தே யாற்றிவந்தனர். அன்னாரின் தவப் புலவரும்,

"தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப்படும்"

என்பதற் கிலக்காக இலங்குபவரும், தீவுப்பற்று மணியகாரருமாகிய ஸ்ரீமான் சோமசுந்தரம் J. P. அவர்களும் 'தந்தையெப்படி மகனப்படி' என்றவாறு இவரை ஆதரித்து வந்தார். அன்றிப் புலவரியற்றிய இரட்டை மணி மாலை என்னும் நூலை அச்சிடுவித்திருக்கின்றார். புலவர் ஒரு சமயத்திலே தமக்குப் பாடியனுப்பிய சீட்டுக் கவியைப் பாராட்டிப் பொற்பரிசிலு மளித்தவர்.

சீர்பூத்த பரசிவப் பேறெய்து மாறுதவு
தெய்விகச் சைவ திலக!

திமிரம் பறித்தொளிசெய் பஞ்சாக்ர மெண்ணியனு
தினநீறு பூசு நியம!
சிதம்பர திகம்பர னிதந்தர நடந்தரு
சிலம்பொலி பதங்கொ ளிதய!
செயமங்கை கலைமங்கை திருமங்கை குடிகொண்ட
திண்புய நன்னுவின் மரும!
ஏர்பூத்த யௌவனநல் லார்தம துளத்தினி
னிலங்கிடுந் தருண மதன!
இங்கிலிஷு மின்றமிழு மாய்க்குலவு துவிபாஷை
யேய்ந்தபாண் டித்ய நிபுண!
இன்குவளை மணநாறு கங்கா குலம்பொலிய
வெழுதுதுகின் மேழி விருத!
இனசன கனஞ்சலிகை யடிமை குடிமைகளாதி
யெப்பவுசு முற்ற தனத!
பேர்பூத்த முத்தைய மணியமா மகராச
பிரபுயர் சிதம்பரப் பேர்ப்
பெருமாட்டி யாரொடு மியற்றிய தவத்தினிற்
பிரசன்ன மான புதல்வ!
பிரபுக்க டிரமுற்ற துரைமக்க டரமற்ற
பிரபந்த ரீண்டு சமுக!
பிழையுற்ற வொன்னலரை மலையுற்ற வடவிவிடு
பிரபலிய வீர ராம!
கார்பூத்த சோலைசெறி வேலணையோ டேழ்தீப
கங்காக்கு முதன்மை மணிய
காரணஞ் சோமசுந்தர நாம பூப!நற்
கலைவல் பேரம் பலஞ்சொல்
கவிதனைக் கண்டரசர் புலவருக் குதவுநெறி
கண்கூட தாமங் கனேன

கருணைகூர்ந் துபகரித் தீசனருளா லூழி
காலமும் வாழி யினிதே.

இதுவே அச்சீட்டுக் கவியென்க.

புலவர் அவர்களுடைய பெருமை நாளுக்குநாள் எங்கும் பரவி வரலாயிற்று. அக்காலத்து வித்துவ சிரோன் மணியாக விளங்கிய சுன்னுகம் ஸ்ரீமத் குமாரசுவாமிப் புலவர் அவர்களும், ஸ்ரீமத் சிவசம்புப்புலவருடைய மாண வரும், இலக்கண இலக்கிய சித்தாந்த பண்டிதருமாகிய கரணவாய் ஸ்ரீலஸ்ரீ நமசிவாய தேசிகரவர்களும், வண்ணை ஸ்ரீமான் வைத்தியலிங்கம் பிள்ளை அவர்களும் பிறரும் இவருடைய புலமையைப் போற்றுவாராயினர். இவரியற்றிய இரட்டைமணி மாலைக்குக் குமாரசுவாமிப் புலவரவர்கள் கொடுத்த சிறப்புப் பாயிரத்தில் "கவிதை பாடும் புலவன் பேரம்பல நாமத் தோன்றுனே" எனப் புகழப் பட்டா ராதலினுலும் அந்நூனயத்தாலு மது தொட்டு இவரை யாவரும் பேரம்பலப் புலவரென்னுது புலவ ரெனவே யழைத்து வருவாராயினர்.

இவர் திருவருட் குறிப்பால் வேலணை இலந்தைக் காட்டுச் சித்திவிநாயகர் பேரில் ஓரிரட்டை மணிமாலை பாடி அரங்கேற்றினர். இதன்பின்னர் இவரை யிடை யிடையே வருத்திய தொய்வு நோய் முற்றுய் நீங்கியது. வண்ணைச் சிலேடை வெண்பா, கடம்பர் யமகவந்தாதி, வேலணைப் பெருங்குளத்து முத்துமாரியம்மை ஊஞ்சல், என்னும் நூல்களையும் இவர் இயற்றினுர்.

இவரிடத்துக் கற்ற இவர் மருகர் ஸ்ரீமான் க. வேலாயுதபிள்ளை என்பவர் சிறந்த புராண உரையாசிரியராக விருந்தார். இவரது புதல்வர் ஸ்ரீமான் கனகரத்தினம் என்பவர் சிறந்த இலக்கண இலக்கிய அறிவும் செய்யுளியற்றும் வன்மையும் உடையவர். இவரு

டைய தௌகித்திரர் பண்டிதர் ஸ்ரீமான் கா. பொ. இரத்தினம் அவர்கள் தம்மிளமைப் பருவத்தில் நிகண்டு, நன்னூல், நைடதம், பாரதம், கந்தபுராணம் முதலியவற்றை இவரிடமே பாடங் கேட்டனர்.

புலவரவர்கள் தம்மிறுதிக் காலத்து நாலைந்தாண்டுகளாக உலகப் பற்றெல்லாந் துறந்து யோகமுற்றூர்போல் சிவபெருமானைச் சிந்தித்தலும், பஞ்சாட்சரத்தைச் செபித்தலுமே தொழிலாகக் கொண்டு தம்மில்லைவிட் டகலாதிருந்து 1935-ம் ஆண்டுக்குச் சரியான யுவ யாண்டு புரட்டாதித் திங்கள் கஅ-ம் நாள் சரஸ்வதி பூஸாரம்ப தினமும் தாம் பிறந்த தினமுமாகிய வெள்ளிக்கிழமை மூல நட்சத்திரத்தோடு கூடிய சூரியோதயத்தில் சிவபதமடைந்தார்.

தோன்றிற் புலமையுடன் தோன்றுக வஃதிலார்
தோன்றியும் தோன்ரு தவர்.

திருச்சிற்றம்பலம்.

———

இதழ்—உ.

பேரம்பலப் புலவர்

இயற்றிய

# வண்ணைச் சிலேடை வெண்பா.



உ

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.



கோப்பாய்

அரசினர் ஆசிரியகலாசாலைத் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்

ஸ்ரீமான். வே. மகாலிங்கசிவம் அவர்கள்

சொல்லியது.

வெண்பா.

வேலணையும் செங்கை விமல னடிமறவா
வேலணையூர்ப் பேரம் பலவிபுதன்—கோலமுறும்
வண்ணச் சிலேடைவெண்பா வாய்த்த தமிழ்ப்புலவோர்
எண்ணப் பகர்ந்தான் இனிது.

திருச்சிற்றம்பலம்.



உ

கணபதிதுணை,

# வண்ணைச்

# சிலேடை வெண்பா.



## காப்பு.

சீருலவும் வண்ணைச் *சிலேடைவெண்பா செந்தமிழாற்
பாருலகில் யானும் பகரவே—நீருலவுங்
கோட்டுவயல் வேலணையூர்க் கோல மலரிலங்கைக்
காட்டு விநாயகன்றாள் காப்பு.

மங்கலச்சி ரோவாத வண்ணைச் *சிலேடைவெண்பா
விங்கெனக்கு முன்னின் றியற்றுவிக்கும்—அங்கணுறை
தையற் பிராட்டியொடு தாணுவைத் தீசருள்
கையற்புதப் பொருப்பின் கால்.

## நூல்.

பூமேவு காவகத்தும் பூவசியர் மேவகத்தும்
மாமேவு கோகிலஞ்சேர் வண்ணையே—தூமேவும்
அந்தாத்தி னுள்ளா ரடையார்க் கருளவவர்
அந்தாத்தி னுள்ளா ரகம். க

---

* "ஐகாரம் ஙைவேல் ஒரும் குறளியல்பு" (யாப்பருங்கலக்காரிகை) என்றபடி சிலேடைவெண்பா என்பதைக் கருவிளங்காயாகக் கொள்க,

செந்திருவாழ் வீதியினுஞ் செய்செபத்தோர் நாவினுஞ்சீர்
மந்திரங்க ளாருமெழில் வண்ணையே—சந்தமிகுஞ்
சார விருக்கார் தயையிலர்பா லெப்போதுஞ்
சார விருக்கார் தலம். ௨

மேதா வியர்காமும் வீதியினிற் கைமாவும்
மாதானஞ் சிந்துமெழில் வண்ணையே—சாதாஞ்
சயந்தனத்தை யூர்க்கிடர்செய் தானவரூர் மேற்குச்
சயந்தனத்தை யூர்ந்தான் றலம். ௩

காசுகிளர் மேனிலையிற் காரிகையார் தங்குழலில்
வாசம் புரிந்திடுஞ்சீர் வண்ணையே—தேசுறுமான்
பாணியான் பாணியான் பாவியெற்கும் வந்தருளப்
பாணியான் பாணியான் பற்று. ௪

அந்தரத்தைப் போலிடையா ரம்மமுமன் னூர்காமும்
மந்தரத்தைப் போல்வழங்கும் வண்ணையே—சந்ததமும்
மாசடையார் வாழ்த்த மணிமன்று ணின்றாடும்
மாசடையார் வாழு மனை. ௫

கண்டி னினிமொழியார் கையினுங் கோதையினும்
வண்டி னணியிசைக்கும் வண்ணையே—தண்டுவில்
சங்கக்கோ பாலன் றனயனைக்காய்ந் திட்டதமிழ்ச்
சங்கக்கோ பாலன் றலம். ௬

ஏவடுவிற் றீரரெழிற் கையுமா னூர்விழியும்
மாவடுவைக் காட்டுமெழில் வண்ணையே—பாவகனே
டென்று மதித்திருக்கா பேத்தாச் சுமடருளத்
தென்று மதித்திருக்கா ரில். ௭

கொம்புமுத னற்பூவுங் கோமளமின் னார்குயமும்
வம்பு விடுத்துமிளிர் வண்ணையே—சப்பாணம்
பன்னகத்தா னத்தன் பரையளிக்கும் பூணரப்
பன்னகத்தா னத்தன் பதி. அ

பூணுண் மலர்மிலைச்சும் பூவையர்மெய் நோக்கிசைவேள்
வாளுண் சிலைநிகரும் வண்ணையே—பேணார்க்காம்
பாலத் திருக்கரத்தர் பார்த்துவே ளைத்தீத்த
பாலத் திருக்கரத்தர் பற்று. கூ

வஞ்சி யிடையார் மலர்ப்பதமும் வாணகையும்
மஞ்சரியைக் காட்டுமெழில் வண்ணையே—வஞ்சரைத்துன்
பத்துக் களித்திடுவான் பார்ப்பதிமின் னார்குபத்தின்
பத்துக் களித்திடுவான் பற்று. கய

ஆசியினற் பாணரும்பா ராள்வேந் தருந்தெருவில்
வாசியின்மீ தேறுமணி வண்ணையே – கேசிபவம்
பத்தி னரிச்சித்தான் பசுபதியென் றேபுணர்மார்
பத்தி னரிச்சித்தான் பதி. கக

ஆரஞ் செறிவயலு மன்னநடை யார்விழியும்
வாரம்பின் மிக்கதிரு வண்ணையே—தேரின்
மலைவிலாக் கத்தன் மருவாரைச் சாட
மலைவிலாக் கத்தன் மனை. கஉ

கன்னியரும் வேதவிதி கற்றுணர்ந்த நற்றவரும்
வன்னிவளர்க் குஞ்சீர்த்தி வண்ணையே—முன்னிலமுண்
ணஞ்சக் கரத்தா னரியுருத்தீ ரத்தியைநல்
கஞ்சக் கரத்தா னகம். கங

பூவிரவு மன்னவரும் புண்ணியப்பே றுற்றவரும்
மாவிரதம் பூண்டொழுகும் வண்ணையே—வீவிரவும்
பொன்னுகத் தானென்ன கணன்போற்றுங் கோதண்டப்
பொன்னுகத் தானென் புரம். கச

இக்கார் மொழியா ரெழில்விழியு மாளிகையும்
மைக்கா ரொழியாத வண்ணையே—கைக்கார்வன்
மைமாதங் கத்துரியார் மால்வரையன் பெற்றவெம்மம்
மைமாதங் கத்துரியார் வாழ்வு. கரு

சாலவறச் சத்திரத்துந் தாமரையிற் பூமீதும்
வாலியனல் லன்னமுறும் வண்ணையே—ஞாலமுண்ட
வன்முளரிக் கண்ணன் வருந்தமத னைச்சுட்ட
வன்முளரிக் கண்ணன் மனை. கசு

தேமொழியா ரானனமுஞ் சீலமக லாருளமும்
மாமதியின் மீக்கூரும் வண்ணையே—காமனுந்து
வையம் புதையார் மகிதலம்விண் டாம்பெரிய
வையம் புதையார் மனை. கஎ

சுந்தரவில் வாழ்க்கையருந் தூயறிஞருந் தனப்பேர்
மந்திரியின் மிக்கதிரு வண்ணையே—சந்தமதன்
அங்கங் கெடுத்தா ரடியார்க் கருளவுரு
வங்கங் கெடுத்தா ரகம். கஅ

மீளியர்தந் தூணியினு மின்னார் குழையினும்பொன்
வாளி செறிந்துறுஞ்சீர் வண்ணையே—மாளிமையோர்
என்பினு கத்தா னிலங்கும் பசுபதிதா
னென்பினு கத்தா னிடம். கசு

போகவேளா ளர்கா மும்பொரு நர்மொய்ம்பும்
வாகை நிதங்குலவும் வண்ணையே—தேகமேல்
ஆசை யுடையா ரகத்திரா ரெட்டாகும்
ஆசை யுடையா ரகம். உ௰

இஞ்சி யகழினுமின் பேறமளி மந்திரத்தும்
மஞ்ச மிகவாரும் வண்ணையே—நஞ்சிவையின்
பாசம் பிரியார் பணியார் தமைச்சிமிழ்த்த
பாசம் பிரியார் பதி. உக

பூதிரங்கா மன்னர் புயமும் பெரும்புகழும்
மாதிரங்கா ணுஞ்சீர்த்தி வண்ணையே—யாதிரையான்
சங்கக் குழையான் றமிழ்ச்சங்கத் தான்குழையிற்
சங்கக் குழையான் றலம். உஉ

சுத்தம் பொருந்துமளைச் சாடியினுஞ் சோலையினு
மத்தம் புகுந்திசைக்கும் வண்ணையே—யத்தத்
தரத்துக் குறியான்றன் றங்கைவளை கொங்கைத்
தரத்துக் குறியான் றலம். உ௩

பூவிற் றிருவனையார் பொற்புரையும் பூங்குழலும்
மாவிற் குயிலேனேரும் வண்ணையே—மூவிற்
றிருக்கை யுடையார்தஞ் சீருரையார்க் கெய்துந்
திருக்கை யுடையார்தஞ் சேர்பு. உ௪

தூய்க்க ழனி நெல்லைத் தொழுவரும்விற் பன்னருந்தாம்
வாய்க்க விதையாக்கும் வண்ணையே—மீக்குலவும்
ஏமமலை வில்லா ரிருடிபன்னி மார்புணர்ப்பின்
ஏமமலை வில்லா ரிடம். உ௫

கோகனதை யன்னார் குணமுநடை யும்வேளின்
வாகனத்தை மானுமெழில் வண்ணையே—மோகமிழை
இக்குவே ளைக்கொன்று றெண்ணார்க் கெமன்புரியும்
இக்குவே ளைக்கொன்று ரில். உசு

தூணிகரங் காடியினுஞ் சொற்புலவர் நாவினுஞ்சீர்
வாணிகமங் கூர்ந்துறகும் வண்ணையே—பாணி
தாத்துத் தரித்தார் தமிழ்க்கிர னேடா
தாத்துத் தரித்தார் தலம். உஎ

கூழைக்குயின் மடவார் கோலநோக் குந்தெருவும்
மாழைக் குலங்காட் டும் வண்ணையே—காளவிடக்
கந்தரத்தர் கந்தரத்தர் கங்கங் குலுங்கிடச்செய்
கந்தரத்தர் கந்தரத்தர் காப்பு. உஅ

நாளும் படகரினுஞ் ஞாட்புழவர் தங்கையினும்
வாளம் பொருந்தியுறும் வண்ணையே—நீளும்
மதலைகாண் மெய்யன் மதலைமெய்தீத் தான்பொன்
மதலைகாண் மெய்யன் மனை. உசூ

போதலருஞ் சோலையினும் பொன்னு டரங்கினும்நன்
மாதவிபொன் னுடுறுஞ்சீர் வண்ணையே—சேதித்த
தாரம் படைத்தார் சடையிற் பராபரையாம்
தாரம் படைத்தார் தலம். ௩௰

அந்திருவன் னார்குழலி னண்டமுறு தண்டலையில்
மந்திகளித் தற்றுவவும் வண்ணையே—கந்தமலர்த்
தந்திடையார் வைகுந்தன் றங்கைக் கிடப்பாகந்
தந்திடையார் வைகுந் தலம். ௩௧

பூணத் தெழின்மடவார் போர்விழியுங் கந்தரமும்
வாணத்துக் கொப்பாகும் வண்ணையே—சேணிற்
கலையவி ரும்பிறையார் காதலியேன் றன்புங்
கலையவி ரும்பிறையார் காப்பு. ௩௨

கோகனகப் பூவினுஞ்செங் கோலரசர் வீதியினும்
வாகனங்கண் மீதிவரும் வண்ணையே—யோகமுறீஇ
ஆலடிக்க ணுற்று ரருச்சுனன்காண் டீபமென்வில்
லாலடிக்க ணுற்று ரகம். ௩௩

கோவிருப்பின் வானவருங் கொண்டறுயி றண்டலையும்
மாவிருப்பை புற்றுரும் வண்ணையே—சேவியா
தையம் புகுந்தா ரகத்திரா ரன்றுவனத்
தையம் புகுந்தா ரகம். ௩௪

கொக்கிறுற் குற்றமருங் கோட்டமுமின் னிடையும்
வக்கிராங் கங்காட்டும் வண்ணையே—மிக்கவசிப்
பாலக் கரத்தர் பரையமலை தங்குமிடப்
பாலக் கரத்தர் பதி. ௩௫

காசற்ற மாணவருங் கற்புரமும் பள்ளிகளில்
வாசித்த லோவாத வண்ணையே—ஆசை
இறும்பூது வில்லா ரிறையரியுந் தேரா
விறும்பூது வில்லா ரிடம். ௩௬

நேமிப்புள் வாழையொடு நீல விழிமடவார்
வாமத் தெழில்கவரும் வண்ணையே—காமித்த
பத்து வசத்தினன் பங்கயன்றூழ்த் தேத்துமிட
பத்து வசத்தினன் பற்று. ௩௭

மெல்லியலார் நுண்ணிடையும் வெம்பா தகர்தாளும்
வல்லி பொருந்தியுறும் வண்ணையே—செல்வி
தனத்துக் குவந்தார் தவற்குநமன் செய்வே
தனத்துக் குவந்தார் தலம். ௩அ

ஐயந் தருமிடையா ரம்பகத்திற் கும்பொறைக்கும்
வையம் புரையாடும் வண்ணையே—தையன்
மறைப்பரியான் சம்பரன்றன் மாற்று னுடல்பொடித்தான்
மறைப்பரியான் சம்பரன்றன் வாழ்வு. ௩கூ

அப்பார் கழனியினு மாசைத் தளியினுமேல்
வைப்போர் மிகுந்துறுஞ்சீர் வண்ணையே—முப்புரந்தீர்
வையம் பரிபார் மறைசிலைகன் ஞணரவம்
வையம் பரியார் மனை. ௪௰

அள்ளல் வயன்மடவா ராம்பல்வா யுங்குழையும்
வள்ளை யுரையாடும் வண்ணையே—வெள்ளைநிற
அஞ்சத்த னத்த னறியா னயிற்குமரன்
அஞ்சத்த னத்த னகம். ௪௧

தூற்றுமலர் வாவியினுந் தூயதொழு வத்தினுந்துய்
வாற்சலமார்ந் துற்றதிரு வண்ணையே—ஏற்றிலுறும்
சம்புமா வாக்கினன் சங்கமுறுங் கூடலிலே
சம்புமா வாக்கினன் சார்பு. ௪௨

ஏய்ப்பா ரிடையாரு மீர்ம்புலமை யோருநிதம்
வாய்ப்பா வலங்கரிக்கும் வண்ணையே—தோய்க்காவேற்
செங்கை முருகன் றிருத்தாதை மார்கழியிற்
செங்கை முருகன்றன் சேர்வு. ௪௩

பண்குலவு மின்மொழியார் பார்வையொடு கந்தரமும்
வண்குவளை காட்டுதிரு வண்ணையே—விண்புதரும்
நச்சுதனத் தானதிக நண்ப னகிலமுண்ட
அச்சுதனத் தாண்ற னகம். எச

செய்குன்றிற் கத்திகையுஞ் சேயிழையார் நோக்குமொளிர்
வைகுந்தத் தோங்குமெழில் வண்ணையே—மைகுந்து
கண்டத்த ரத்தர் கதிராழி சங்குவில்வாள்
தண்டத்த ரத்தர் தலம். எரு

சேதிமத்திற் பொன்முடியுந் தெங்கி னிளநீரும்
மாதர்சொற் கங்காட்டும் வண்ணையே—ஓதமுதர்
கேளைக்கேட் டுக்களித்தார் கேழ்புரத்தைச் சுட்டாரோம்
வேளைக்கேட் டுக்களித்தார் வீடு. எசா

நல்லார் பயோதரத்து நாற்புறத்துக் காப்பினுந்தூ
வல்லார முற்றிறைகொள் வண்ணையே—வில்லோர்கள்
மன்னம் பலத்தான்பின் னேன்வயத்தோர் பூவாக்கொள்
பொன்னம் பலத்தான் புரம். எஎ

நாகமுலைச் சூளையரொ ணுட்டமு'- ணுடரங்கும்
மாக ரவைவிளக்கும் வண்ணையே—வேகப்
படநாகப் பூணுன் பணியாரைப் பேணல்
கடனுகப் பூணுன்றன் காப்பு. எஅ

அங்கனையார் கூந்தலுக்கு மாதியினுற் கும்புதர்தூ
மங்கலச் சீர்சேர்த்தும் வண்ணையே—பொங்கும்
புலைமுனியாக் கையன் புரிவினையும் போக்கும்
மலைமுனியாக் கையன் மனை. எகூ

மேலான மாதவத்தோர் மேனியுமீ வார்காமும்
மாலா பலங்காட்டும் வண்ணையே—தோலாத
சொன்னமலை வில்லார் சுருதிசொற்ற வெண்குணங்கள்
இன்னமலை வில்லா ரிடம். அ௰

சீலமா மாத்திர நுஞ் செந்தமிழிற் பாவலரும்
மாலைமாற் றுப்புரியும் வண்ணையே—மூலமிலாச்
சித்துரு மச்சடையான் சிந்து மதிமிலைச்சும்
வித்துரு மச்சடையான் வீடு. அக

காரிகையா ரானனமுங் கந்தரமுங் கண்டுதட
வாரிசங் கேதமுறும் வண்ணையே—பாரமுலைப்
பந்திடைச்சி யார்பாலாற் பட்டவடி மால்பிணையாந்
தந்திடைச்சி யார்பாலார் சார்பு. அஉ

அஞ்சநடை யாரிடையு மான்றோர் புனைகவியும்
வஞ்சியுரிச் சீர்காட்டும் வண்ணையே—அஞ்சுவர்க்கம்
வாரங் குலைக்குமம்மான் வாமத்த னென்வினையின்
பாரங் குலைக்குமம்மான் பற்று. அந

விஞ்சுநிதி வர்த்தகரும் வெஞ்சினப்போர் வீருந்தா
மஞ்சிகையுள் வைக்குமெழில் வண்ணையே—அஞ்சுந்
துடியா ராவத்தர் சோமேசர் நஞ்சின்
கடியா ரரவத்தர் காப்பு. அச

தீதில் வயித்தியருந் தேனு மெழும்பித்த
வாதசுரம் போக்குமெழில் வண்ணையே—காதற்
புலியார் பதஞ்சலியார் போற்றமன்றி லாடுங்
கலியார் பதஞ்சலியார் காப்பு. அரு

அல்லிக்கு நேர்வாயா ரம்மமசைப் போடிசைப்பும்
வல்லிக்கு நேர்காட்டும் வண்ணையே—மல்லற்
பிறையா ரணியசதர் பேதையையு மாட்கொள்ள
மறையா ரணியத்தர் வாழ்வு. அசு

போரியற்று மள்ளர் பொருவி லரிகளைத்தாம்
வாரிக் களத்தடிக்கும் வண்ணையே—காரிரிக்கும்
தீமதி யாதவன்றன் றிட்டியா ரன்பருள்ளத்
தாமதி யாதவன்றன் சார்பு. அஎ

யாழ்மொழியார் கண்ணு மிருட்குழலு மைந்தருளம்
மாழ்கக் கவவுகூர் வண்ணையே—கேழ்முண்
முருக்கிதழி வாமத்தர் மொய்த்துவண்டு சுற்றிச்
செருக்கிதழி வாமத்தர் சேர்வு. அஅ

வாரணத்தை நேருமைந்தர் மார்பும் வளச்செறுவும்
வாரணத்தைப் பூண்டதிரு வண்ணையே—நேருளத்தில்
எண்ணு மலைபாரென் றேயெகின மேனந்தேர்
அண்ணு மலையா ரகம். அசூ

கண்டோ டினிமொழியார் கண்ணு மவர்குழையும்
வண்டோடு நேர்ந்திலங்கும் வண்ணையே—பண்டோர்பால்
அத்தியிடத் தானையரி யாகச் சபித்தவருட்
சத்தியிடத் தானை தலம். கூ0

கோதில் புதர்கவியுங் கோடரமுஞ் சீர்விளம்
மாதளையைக் காட்டுமெழில் வண்ணையே—ஓதத்
துதியால வாயான்முன் னுண்டான் முச்சங்கம்
பொதியால வாயான் புரம். கூக

வண்டுதுக் தாருழுவர் வாழுமறு குஞ்செறுவும்
மண்டுக மிக்கதிரு வண்ணையே—பண்ட
வரைவில்லார் வைகுந்த மாதியகாண் சீர்த்தி
வரைவில்லார் வைகு மனை. ௪௪

மண்டுபுனற் பண்ணையினும் வாவியினுஞ் சோலையினும்
வண்டலை சூருமெழில் வண்ணையே—கொண்டணிற
மாறனடிப் பட்டார் வகிர்ந்துமறி யார்மதுரை
மாறனடிப் பட்டார் மனை. ௪௫

மைவார் விழியார் மருப்புங் களவொழுக்கும்
வைவார்க் கடங்காத வண்ணையே—தைவீக
வேதா கமத்தன் விதிவிலக்கைப் போதிக்கும்
வேதா கமத்தன்றன் வீடு. ௪௬

மூசு மளியினமு முற்று வமருடன்
வாச வரும்பார்க்கும் வண்ணையே—வீசுசுடர்
மாகாத வன்றன் மணிப்பலுதிர்த் தான்வளைமின்
மாகாத வன்றன் மனை. ௪௭

தேவத் திருமறுகிற் றீங்குயிலார் சோலையிற்றோர்
மாவத்தி யாருமெழில் வண்ணையே—தாவில்
உடுக்கை யுடையா ருழுவையின் றோலாம்
உடுக்கை யுடையா ருறை. ௪௮

கான்போ தலர்வயலுங் காணுங் குடிசனமும்
வான்போக மார்ந்துறுஞ்சீர் வண்ணையே—தேன்போதும்
வம்புக் கடுக்கையான் மாலுருச்சேப் பஞ்சனஞ்செய்
வம்புக் கடுக்கையான் வாழ்வு. ௪௯

பூரணத்தைப் போல்விழியார் பொற்களமுஞ் சொற்கமுஞ்
வாரணத்தைப் போலுமெழில் வண்ணையே—ஈரமிலார் [சேர்
பாலின் மதிச்சடையார் பத்திரைபூங் கொன்றைகமழ்
பாலின் மதிச்சடையார் பற்று. ருய

மேன்மாடத் தாடியுநீர் விஞ்சுங் தடம்பணையும்
வான்மீனைக் காட்டுதிரு வண்ணையே—மான்வாமச்
சங்கையான் சங்கையான் றன்னையூர் வான்பிரமன்
கங்கையான் கங்கையான் காப்பு. ருக

நாளுமிறை வீதியினு நற்செயினு மேத்துபடை
வாளுழவர் மல்குமெழில் வண்ணையே—நீளொளிகூர்
பீதாம் பரத்தன் பிரமன் றொழுமடிக்கும்
போதாம் பரத்தன் புரம். ருஉ

காரிகையார் மக்களையுங் காப்பகமுஞ் சீகரத்தால்
வாரிமுத் தங்கொடுக்கும் வண்ணையே—பாரினையுண்
மாலம் படைத்தார்பால் வாரிதியாந் தூணியிற்கண்
பாலம் படைத்தார் பதி. ருங

வீங்குகொடை யாளரும்போர் வீரருந்த நேர்ந்துமுகம்
வாங்குதலை நோக்காத வண்ணையே—தீங்கார்
அகமா மனைக்கொன்றா ரன்றுதக்க னைவஞ்
சகமா மனைக்கொன்றார் சார்பு. ருச

வாலைமட வார்குழலும் வண்புலவர் நாவும்பா
மாலை புனைந்திடுஞ்சீர் வண்ணையே—சீலமுளோர்
ஆய்ந்தபர தத்துவந்தா னானன் கனகமன்றுள்
வாய்ந்தபர தத்துவந்தான்வாழ்வு. ருரு

செம்பதுமப் போதினுமெப் போதினுந் தேர்ந்தாரிடத்தும்
வம்பளத்தல் காணாத வண்ணையே—கம்பின்
அரிவையம் பாகத்தா னண்டாளூர்ச் செற்றான்
தெரிவையம் பாகத்தான் சேர்வு. ருசு

கோட்டாவின் மள்ளர் கொடுங்கரமுஞ் சேவகமும்
வாட்டானை மன்னுமெழில் வண்ணையே—வேட்டார்
விரதத்து வந்தார் விரவலர்போர்க் காப்பூ
விரதத்து வந்தா ரிடம். ருஎ

மன்னுதடங் காவகத்து மாமுனிவர் வேள்வியினும்
வன்னியறு காலனஞ்சேர் வண்ணையே—துன்னும்
இசையா ருடுக்கையா ரீசைபங்க ரெட்டாத்
திசையா ருடுக்கையார் சேர்வு. ருஅ

இட்டசெந்நெல் வாழைகரும் பின்னவுமா ணூர்விழியும்
மட்டங் கடந்துவிடும் வண்ணையே—குட்டமுறும்
அங்குவளை விற்றுரை யார்நுதற்பெண் ணத்தான்று
சங்குவளை விற்றார் தலம். ருசு

நாகநிமிர் சேதிமத்து நாற்புறத்து வீதியினும்
மாகரிதே ரென்றுமன்னும் வண்ணையே—யோகமுறும்
அன்பா ரிடத்தினு ரான்றவுத ரக்குறுந்தாள்
வன்பா ரிடத்தினார் வாழ்வு. சூ0

கைக்கோல் வளையார் கதுப்புங் கணைவிழியும்
மைக்கோலங் காட்டுமெழில் வண்ணையே—மிக்கார்வே
றில்லைப் பதியாரு மென்னத்தீ நஞ்சமுண்ட
தில்லைப் பதியார்தஞ் சேர்வு. சூகு

ஒப்பா ரிலாப்புதரு மோங்கு பதாகையுங்கோ
வைப்பாடல் செய்யுமெழில் வண்ணையே—துப்பாரும்
கந்தனத்தி யத்தன் கவுணியற்குப் பால்சுரந்த
வெந்தனத்தி யத்தன்றன் வீடு. சுஉ

சத்திசிவங் காதலராஞ் சங்கப் புலவரறு
வத்திரத்தார் கோட்டமமா் வண்ணையே—பித்தியல்செய்
காமனையம் புக்கான் றவர்மகளிர் கற்பழியும்
வாமனையம் புக்கான் மனே. சுங

துன்றுபல வீதியினுந் தோகையர்த மோதியினும்
மன்றனிதங் குன்றாத வண்ணையே—ஒன்றும்
அருக்கங் கனியா ரருட்பாப் பொழிமூ
வருக்கங் கனியார் மனே. சுச

ஏத்து மருத்துவரு மேய்ந்த மணிக்கூடும்
மாத்திரையைத் தேறவுரை வண்ணையே—கோத்திரங்காண்
பெண்ணண் புடையான் பிரதிவிம்பச் சுந்தரன்மேற்
பண்ணண் புடையான் பதி. சுரு

மாகவிடை யார்நுதலு மைந்தரும்போ ராற்றுதிறல்
வாகுவினேர் காட்டுமெழில் வண்ணையே—சேகரமார்
பூங்கொன்றைத் தாரார் புகழ்ந்துபணி யாதவர்க்கீங்
காங்கொன்றைத் தாரா ரகம். சுசா

ஆர வயல்களினு மாம்பற் றடங்களினும்
வாரி வளமிகுத்த வண்ணையே—ஈரமிலார்க்
குற்ற தலையுடையா ரும்பல் புலியுதிரம்
பற்ற தலையுடையார் பற்று. சுஎ

துண்டப் பிறைநுதலார் துண்டமுஞ் சூதரும்பூ
மண்டிலத் தேரோட்டும் வண்ணையே—கொண்டவருட்
செம்மை யருக்கொளியார் செம்பதுமன் மாலுணரா
வெம்மை யருக்கொளியார் வீடு. ௬௮

கள்ளொழுக்க மானுருங் கைகாட் டவரிடையும்
வள்ளி யியல்காட்டும் வண்ணையே—புள்ளூருக்கொண்
மஞ்சா னனத்தன் மலர்த்தா டலைகாணப்
பஞ்சா னனத்தன் பதி. ௬௯

காரிகையா ரம்மமும்பாக் கற்றபுல வோர்நாவும்
வாரிசா தங்காட்டும் வண்ணையே—நாரி
இடத்தார் பரசினார்க் கின்புய்க்குந் தெய்வ
நடத்தார் பரசினார் நாடு. ௭௰

விண்டுறங்கு தண்டலையு மேல்வீடு மீக்களிகூர்
வண்டுறக்கஞ் சேருமெழில் வண்ணையே—மண்டுறந்த
மாலா னடத்தினான் வன்கா லனையுதைத்த
காலா னடத்தினான் காப்பு. ௭௧

தூசுகிளர் மாளிகையுந் தோகையரல் குற்றடமும்
மாசுணத்தைக் காட்டுமெழில் வண்ணையே—பேசுமொரு
நல்லற மாட்டினார் நாள்காட் டருக்கன்றன்
பல்லற மாட்டினார் பற்று. ௭௨

ஞாங்க ரகழியினு நான்குதிக்கு வீதியினும்
வாங்குதிரை மேற்கிளரும் வண்ணையே—தீங்கார்
தவத்தைக் கடுப்பார் தமியேனுக் குற்ற
அவத்தைக் கடுப்பா ரகம். ௭௩

மண்டாலப் பொய்கையினு மாதங்க வீதியினும்
வண்டான மிக்கதிரு வண்ணையே—எண்டாவும்
சீர்க்குமர னார்தலைமையர் செங்கைதனிற் புள்ளிமான்
ஆர்க்குமர னார்த மகம். ௬௨

சூதம் பலாவரம்பைத் தோப்பி னறுந்தளவின்
மாதர் டலம்பொலியும் வண்ணையே—மோதுபெரும்
பூதப் படையார் புவிநீச னென்றெணைமேல்
ஓதப் படையா ருழை. ௬௩

நானக் குழலார் நடுவுமவர் கந்தரமும்
வானத்தை நேருமெழில் வண்ணையே—ஊனக்கட்
டேகத் துதியா ரியறெரிந்தே யாங்கவர்தம்
ஆகத் துதியா ரகம். ௬௪

அம்படுகண் ணாளகத் தன்னார் களவொழுக்கில்
வம்பலர்மீந் தேபொலியும் வண்ணையே—கிம்புரி
கோட்டானை யானையன் கோவிந்தன் போற்றுதிறற்
தாட்டானை யானையன் சார்பு. ௬௫

தண்டலையின் மாற்றார் சமர்முகத்திற் போந்தமரின்
வண்டரவம் பாடுமெழில் வண்ணையே—முந்துகிளும்
கந்தலை யோட்டினார் கையே னுளத்துயரின்
நந்தலை யோட்டினார் நாடு. ௬௬

தெண்டுக்கை வீரர் புயமுந் தெருப்பலவும்
வண்டிக் குலமாரும் வண்ணையே—பண்டைவினை
தீரப் பரசினார் சிந்தையரொன் றூரையடு
வீரப் பரசினார் வீடு. ௬௭

எண்டகுபொற் கோபுரமு மீர்ம்பணையிற் பெற்றமுமான்
மண்டலம்பூண் டுற்றதிரு வண்ணையே—அண்டரினல்
போகத் திருந்தார் புரமெரித்தார் செல்வியொரு
பாகத் திருந்தார் பதி. ௯௮

ஞண்டுமுழர் தாளார் நயனமொடு கந்தரமும்
வண்டு நிகராகும் வண்ணையே—விண்டுதவு
விற்புருவ மானுர் விழையிடத்தர் தொண்டருளத்
தற்புருவ மானு ரகம். ௯௯

சேணுற்ற மாளிகையுஞ் சேயிழையா ரின்மொழியும்
மாணிக்க மேய்ந்திலங்கும் வண்ணையே—பாணித்தோர்
உள்ளத் திருப்பினு ருள்ளேற்குஞ் சஞ்சிதத்தை
மெள்ளத் திருப்பினுர் வீடு. ௱

மான்போல் விழியாரு மைந்தருமற் றெவ்வுயிரும்
வான்போக முற்றமரும் வண்ணையே—தேன்போலும்
தையற் பிராட்டியொடு தாணுவைத் தீசருற்றே
மெய்யற் புதவருட்பெய் வீடு. ௱௧

வாழிதிரு வண்ணைநகர் மன்னவர்செங் கோன்முகில்
வாழிதிரு நீறுகண்டி மன்னுசைவம்—வாழியவே
தையல்வைத் தீசரு டன்னு லடியரெலாம்
வையகமே லோங்கி வளர்ந்து.

முற்றும்.



பேரம்பலப் புலவர்

இயற்றிய

# வேலணை இலந்தைக்காட்டுச் சித்திவிநாயகர்

# இரட்டை மணிமாலை.

[உ-ம் பதிப்பு.]



உ

சிவமயம்.

# சிறப்புப் பாயிரம்.

கரணவாய்

## ஸ்ரீலஸ்ரீ. கை. நமசிவாய தேசிகரவர்கள்

சொல்லிய

### ஆசிரிய விருத்தம்.

மாதவனை யனையமுத்து மணியமீந்த மகன்சோம
சுந்தரமா மணிய வண்ணல்
சீதமலர்ப் பொழிலிலங்கைக் காட்டின் மேவுந் தெய்வசித்தி
விநாயகற்குச் சேர்ந்த வன்பாற்
கோதகல விரட்டைமணி மாலை யொன்று கூறுகெனப்
புகன்றனன்கோ ணேச வள்ளன்
மாதவத்தால் வேலணையின் வந்த பாலன் மாண்புறுபே
ரம்பலநா வலவன் றானே.

---

சுன்னாகம்

## ஸ்ரீமத். அ. குமாரசுவாமிப் புலவரவர்கள்

சொல்லிய

### ஆசிரிய விருத்தம்.

செந்திருவாழ் வேலணையில் வாழ்ந்த சீமான்
சீர்த்திபெறு முத்தைய மணியக் கோமான்
தந்தபுதல் வன்சோம சுந்த ரப்பேர்த்

தகுஞ்சுகுண மணியவதி காரி கேட்பச்
சந்தமுறு மிரட்டைமணி மாலை யொன்று
சாரிலங்கை நகர்ச்சித்தி விநாய கர்க்குப்
புந்திமகிழ் வொடுமணிந் தான் கவிதை பாடும்
புலவன்பே ரம்பலநா மத்தோன் றானே.

———

வண்ணை

## ஸ்ரீமான், ச. வைத்தியலிங்கப்பிள்ளையவர்கள்

சொல்லிய

### ஆசிரிய விருத்தம்.

மருத்துவனை நிகர்முத்து மணிய மீன்ற
மகன்சோம சுந்தரமா மணியத் தோன்றல்
குருத்துலவு தண்டலைசூ ழிலங்கைக் காட்டிற்
குலவியன்பர் தமக்கருள்கைக் குன்ற மீது
திருத்தமுறு மிரட்டைமணி மாலை யொன்று
செப்புகெனக் கவிஞரெலாஞ் செவியான் மாந்திப்
பொருத்தமுள தெனவியக்கச் செய்தா னந்தப்
புலவனு ரெனிலினிது புகலக் கேண்மோ.

### யமகக்கட்டளைக்கலித்துறை.

பேரம் பலவ னுறைசய வேலனை பெற்றொளிசேர்
பேரம் பலவ னுறையானைச் சென்னி பிறங்கமிலை
பேரம் பலவ ரடிபணி கோணேசர் பெற்றசுதன்
பேரம் பலவ னெனுநாம முற்ற பெருந்தகையே.

———

வேலணை

## ஸ்ரீமான். தப்பு ஆசிரியரவர்கள்

சொல்லிய

### ஆசிரிய விருத்தம்.

திருமானுங் கலைமானுந் தினமாறிப்
படியேறிச் சினமாறுதே
பெருமானங் கண்டாறப் பிரபுத்து
வக்குறிகள் பேணிவாழும்
ஒருமானு கியசோம சுந்தரனு முபவேந்த
னுரைமேற் கொண்டே
வருமான விரட்டைமணி மாலையொன் று
சொற்றனன்மற் றவனு ரென்னில்,

அரியசிவா சாரமிக்கோ மமர்ந்திடுநல் வேலணைக்கோ
ஈரும்பா வல்லோன்
திருவளர்மே ழியர்குலக்கோர் திலதமெனும் புறமனக்கோள்
தீர்ந்த திவ்பம்
தருநிறையா தியநான்குஞ் சார்ந்துகலா விநோதனுமாய்த்
தருமம் பேணும்
பிரபுவுமா கியபோம் பலபிள்ளை யெனுநாமம்
பெற்ற வேளே.



கணபதிதுணை.

### வேலணை இலந்தைக்காட்டுச்

### சித்திவிநாயகர்

# இரட்டைமணிமாலை.



## பாயிரம்.

### விநாயகர் காப்பு.

நேரிசைவெண்பா.

ஈழமுக வேலணைக்க ணேயிலந்தைக் கான்றளிவாழ்
வேழமுகச் சித்தி விநாயகனே—ஏழை நிற்கோர்
மன்னு மிரட்டைமணி மாலைசெய மற்றுனது
பொன்னடிப்போ தாய்குவனிப் போது. க

திருநாரை யூரிற் சிறுமழலை நம்பி
பெருநாரைக் கொண்டு பிணிப்பக்—குருவாகி
யெக்கலையும் போதித் திடாகற்றும் வேழமின்றென்
பக்கலையும் பார்க்கும் பரிந்து. உ

### பரசிவம்.

வண்றெண்டற் காப்பரவை வாயிற் படியடைந்தும்
பொன்றில்லை மன்றினடம் பூண்டுமே—நின்றுமுனிக்

கன்று துயரிழைத்த வந்தகனைத் தாக்கியதா
ளின்றுவந்தென் முன்னிற் குமே. ௩

## சிவசத்தி.

தோடத் தலைப்பூண்ட துய்யதமிழ் வேதமுறை
பாடக் கவுணியற்குப் பாலூட்டும்—பீடனையே
யென்றாயு நீயே யிதிலா யிரங்கூற்றி
லொன்றேனு மீயவொண்ணு தோ. ௪

## வைரவக்கடவுள்.

கஞ்சன் றலைபுளொன்று கண்ணுதலை யெள்ளமுனங்
கெஞ்சும் படியுகிராற் கிள்ளியே—விஞ்சுஞ்
சுரரிறுமாப் போடமேவர் சோரிகொண்ட வென்றிப்
புரவலனைத் தாழ்வேன் புகழ்ந்து. ௫

## வீரபத்திரக்கடவுள்.

தக்கன் றலையுமவன் முன்செய்த வேள்வியுமங்
கொக்க விருந்தவியுண் ணும்பரொடும்—பொக்கமறச்
செற்றதிறற் சேவகன்றன் செம்பொற் றிருவடியைச்
சற்றுமற வாதெனுளந் தான். ௬

## குமாரக்கடவுள்.

கார்வான் பொலிவெங் கதிர்போன் மயிலேறிச்
சூர்மாய்ந் திடவிண் சுரர்குடிபோய்ச்—சீர்மேவத்
தாவடிவே றொட்டவிறற் சண்முகப்பெம் மான்கமலப்
பூவடியே யெற்குப் புகல். ௭

## திருநந்திதேவர்.

சிந்துமதிச் செஞ்சடையான் றெய்வக் கயிலாயஞ்
சந்ததமும் போற்றுந் தலைமைபெற்ற—நந்தி
பெருமான் பதத்துணையென் பேதைமையைப் போக்க
வருமாந் துணையிங்ஙன் வாய்ந்து. அ

## கலைமாது.

வெண்டா மரைத்தேனே வேதன் சுகிகரும்பே
தொண்டா னவர்நாச் சுவையமுதே—விண்டார்
மருகியே தெய்வீக வாணியே யன்னே
யுருகியே யெற்கருட்பா ளாட்டு. கூ

## சமயகுரவர்.

### கட்டளைக் கலித்துறை.

கந்தரைத் தந்த கருணை கரிதனப் பால்குடிசம்
பந்தரைப் பந்த மறுத்தசொல் வேந்தைப் பரனைச்சந்துய்
சுந்தரத் தேவைச் சிவந்திட்டக் கோவைசொ றாமணியைப்
புந்தியுட் சேர விருத்திப் பதாம்புயம் போற்றுவனே. கய

## சந்தானகுரவர்.

பொய்கண்ட மார்க்கங் கணந்தச் சிவஞான போதஞ் சொன்ன
மெய்கண்ட தேவர் மறைஞான சம்பந்த வித்தகரெங்
கைகண்ட கொற்றங் குடியா ருணந்திக் கர்த்தரெனு
மைகண்ட கண்டரடியர்மற் றியாரையும் வாழ்த்துவனே. கக

## வித்தியாதீட்சாகுரவர்.

பூந்தெற் கறிவித்த செல்வர்சித் தாந்த முழுதுணர்ந்த
கந்தப்ப பிள்ளைக் கலைஞன் கனக சபைக்கலைஞன்

சிந்தத் தொடர்முன் சிவதீக்கை செய்தரு டேசிகமன்
சந்தத் திருவடி யெப்போது மென்னெஞ் சகத்தனவே. கஉ

## அவையடக்கம்.

ஐந்தா மிலக்கணச் செந்தமிழ்ப் பாற்கட லாரமுதாஞ்
சிந்தா மணிதிருக் கோவை முதலவுண் செல்வர்சொன்முன்
வந்தே யெனதிவ் விரட்டை மணியெனு மாலைநிற்றல்
செந்தா மரையன்பன் முன்மின் மினியுறுஞ்செய்கையதே. கங

## அச்சிடுவித்தவர்.

நலஞ்சேரும் வேலணை யூர்முத்து மண்ய நரேந்திரன்சேய்
புலஞ்சேருங் கல்வி தனஞ்சீலம் யாவும் பொருந்துமண்ணல்
குலஞ்சேர் மணிபதுரைசோம சுந்தரங் கூறமுன்னோன்
பொலஞ்சே ரிரட்டை மணிமாலை யச்சிற் பொலிந்ததுவே. கச

## நூல்.

### நேரிசைவெண்பா.

பூமேவு கோட்டாற் புயறழுவுஞ் சீரிலங்தைக்
காமேவு கோட்டக் கணுதிபனைத்—தூமேவு
தும்பிக்கை யானைத் துதிப்பார் வினைபோக்கு
நம்பிக்கை யானைநெஞ்சே நாடு. க

### கட்டளைக் கலித்துறை.

காண்கா னனத்தனுந் தோராப் பிரணவ நன்மயமாய்த்
தேன்கா னிலங்தையங் கான்கோவிற் கண்செந் திருமகள்கோ
மான்கா வினன்றுயர் போக்கிய கற்பக மன்னுமென்சொல்
வேன்கா ருணியத்தினனே யெலாந்தர வேண்டினர்க்கே. உ

வேதப் பொருளாகி மேவிலங்கைக் கானமர்ந்த
போதக்களிறதனைப் போற்றுதென்—ஏதநெஞ்சே
யீண்டும்மண்பெண் பொன்றேடி யேயலைவா யீங்கிவற்றின்
மாண்டிடும்போ தென்னே வரும். ௩

வருந்தி நெடுநா ளெடுத்த பிறப்பென்று வைத்துலகிற்
றிருந்தி யொருதன்மஞ் செய்யார் வதரித் திருவனத்தின்
மருந்தெனவந்த பெருமானைத் தாழார் வதைக்கவடம்
பொருந்திய காலன் வரும்போ திவரென் புகலுவரே. ௪

வரையே சிலையாக வாசுகியே நாணுத்
தரையே யிரதமாத் தாமோ—தரனேவாச்
சேர்த்தடையார் முப்புரத்தைத்தீய்த்த பரமனுமெண்
சீர்த்தகையெங் கோலிவனத் தே. ௫

தேசம் பரவும் புகழா ரிலங்கைத் திருவனத்தில்
வாசஞ் செயுமொரு வன்கோட் டிருபத வாரணமே
நேசஞ்செ யன்டர்க் கியைபாச மோடெம னோர்ந்தெறியும்
பாசந் தனையு மறுத்தே யுயர்கதி பாலிக்குமே. ௬

பாலினிசை வள்ளி பருங்குயம்பின் வெங்பொருத
மாலிபமாய் வந்த வரோதயனைக்—கோலி
வனத்தானைத் தம்மனத்துள் வைப்பவரே பூமன்
வனத்தானும் போற்றவாழ் வார். ௭

வாரார் கனதனத் தோகையர் நாட்ட வலையிற்பட்டுப்
போரா தலமா லெய்துநெஞ் சேயிந்தப் பித்தைவிட்டுச்
சீரா ரிலங்கைக் கடஞ்சேர்ந் தருட்கடஞ் சிந்துமொரு
காரார் கரிமுகத் தேவின் பொற் பாதங் கருதியுய்யே. ௮

கருது மடியரிடர் காய்ச்ச வருட்பூத்து
மருதவயற் கோலிக்கான் மன்னுஞ்—சுருதிப்
பொருளுருவக் கற்பகமாம் பூந்தருவே யெய்த்தேன்
கருவிலினி வாராமற் கா. ௯

காச்சேருந் தெய்வக்கயிலாயந் தொண்டர்முன்காணவெளவை
போய்ச்சேரு மாறு புழைக்கரத் தாலுந்தும் போதகத்தைப்
பூச்சேருங் கோலீ வனக்கோயிற் பூண்டருள் பூரணத்தை
நாச்சேரு முன்னந் துதிப்பாய் கதிவரு நன்னெஞ்சமே. ௰

நெஞ்சந் தடுமாற நேர்ந்து தண்டஞ் செய்மறலிக்
கஞ்சவிடா தண்டினரை யாளுமாங்—தஞ்சமென்றே
மாலியம்பப் பாம்பினுரு மாற்றி யருள்புரிந்த
கோலிவனத் தானைமுகக் கோ. ௧௧

கோதா ளவைநிதஞ் செய்வதல் லானினைக் கும்பிட்டொரு
போதா யினுங்குறி யாச்சும டர்க்கருட் பூரிப்பையோ
வேதா வரியன்றி யீசனு மெண்ணும் வியன் பொருளாம்
நாதா வதரிப் பழுவத்திற் சித்திவி நாயகனே. ௧௨

கனமூரும் போகிதுயர் காய்ச்சக் கொடியாய்
முனமூ ரிலந்தைவன முன்னேய்—சினமேரெட்டன்
மேலன் பிலாமலடு வெய்யால காலமெனக்
காலன் வரும்போது கா. ௧௩

காணாத நோக்கமுங் கூம்பாத கையுங் கசிந்துருகிப்
பேணாத நெஞ்சமுங் கோலிப் பழுவப் பிரான் மலர்த்தாள்
பூணாத சென்னியும் போற்றாத நாவும் பொருந்தவெற்கு
வீணாக வேன்படைத் தான்போத னாகிய வேதனுமே. கச

வேதத்து ளொன்றை வியண்மேரு விற்கொம்பாற்
பேதப் படாதெழுது பெம்மானே—பூதப்
படையானே கோலிவனப் பண்ணவனே நாயிற்
கடையேனு முய்யவழி காட்டு. கரு

காட்டி னடிக்கும் பரத்தோடமலையைக் காசினிக்காக்
கூட்டி வலஞ்செய்து மாங்கனி வாங்கிய கொற்றவனை
யேட்டி னடங்காப் புகழ்க்கோலிக் கானிங்க ணேசுரனை
யீட்டிய வன்பொடு போற்றா ரிச்சென்ம மெடுத்துமென்னே.

என்னை வருந்துகின்றா யென்மனமே தந்திமுகத்
தன்னை ·ரவுணனைமுன் சாய்த்த பொருள்—இந்நேரங்
கோலி வனமிருந்த கொள்கைதா னெம்மிடத்தில்
ஏ லும் வினையகற்ற வே. கஎ

ஏகன் றனயனை யெம்வே டுணைவனை யெண்ணரன்றேர்ப்
பாகன் மருகனைச் சீமாட்டி செல்வனைப் பாணிப்பிர
வாகஞ் செறிவயற் சூழு மிலர்தை வனத்தவனை
நாகந் துதித்து வணங்கப் பெற்றேன்முன் னவையற்றதே.

வையகத்தி லண்டினரை வாட்டும் பழவினையாம்
வெய்யிலுக்கு நீழல் விடுக்குமே—துய்ய
குயிலொருவச் சூர்க்குயின்மே வுங்கோலிக் காவிற்
பயிலொருகோட் டீர்ங்கற் பகம். கசு

கற்பார் மனைவியு மைந்தரும் வாழ்வுங் கனதனமு
நற்பாருங் கல்வியு மெல்லா நலங்களு நல்கித்தன்பா
லற்பா லடைந்தவர்க் கவ்வீடு நல்கு மகற்றித்துன்பம்
பொற்பா ரிலங்தையங் காட்டு விநாயகன் பூம்பதமே. உ௰

முற்றும்.



# பேரம்பலப்புலவர் பதிகம்.

பண்டிதர் திரு. கா. பொ. இரத்தினம்

அவர்கள் இயற்றியது.



உ

திருச்சிற்றம்பலம்.

# பேரம்பலப்புலவர் பதிகம்.



## தரவு கோச்சகம்.

மண்ணுட்டில் பெருக்கியவுன் மாண்புடைநற் றமிழமுதை
விண்ணுட்டில் சென்றுபுக விண்ணவர்தாம் நன்கருந்தி
உண்ணுரின் னமுதைவெறுத் துன்றமிழ முதைவேண்ட
எண்ணுதெம் மைவிட்டோ ஏகினைபே ரம்பலமே! க

எந்நாட்டும் முன்னுட்டு மெழில்மிக்க நாடெங்கள்
செந்நெலொடு கரும்புபிற செறிந்திலங்கு வேலணையென்
றிந்நாட்டுப் புகழ்பரப்பி இலங்கியநீ யின்றெங்கே
இந்நாட்டை விடுத்தேகி இருந்தனைபே ரம்பலமே! உ

அருந்தவஞ்செய் தனைப்பெற்ற அன்னையாம் தமிழணங்கிங்
கிருந்தலற நீசென்றே இருக்குமிடம் அறியேம்யாம் [தாள்
பெருந்தவத்தால் பெருமையுடன் பெற்றெடுத்த வுனைப்பிரிந்
இருந்தவமே வருந்தவுனக் கிசையோபே ரம்பலமே! ௩

தோன்றிடில்நற் புகழுடனே தோன்றுகவென் றேமுன்னர்
ஆன்றநூற்பு லமையண்ணல் ஆசிரியன் உரைத்தவது
தோன்றநின்ற நற்செல்வத் தோன்றலே தொன்னூல்கற்
றூன்றமைந்த கொள்கைச்சான் றேனேபே ரம்பலமே! ௪

சோதிடநூற் றுறைகடந்த தொன்முதுசீர்ப் பாவலனே!
மேதினிவாழ் வதுபுல்லின் மேனீரென் றேநினைந்தோ
யாதினியாம செய்வேமென் றியாமிரங்க எமைவிட்டே
ஆதிபரன் அலர்ப்பாதம் அடைந்தாய்பே ரம்பலமே! ரு

காதார முதம்பெறவோர் காரிகைபாற் றூதுசென்றோன்
நீதாவ முதென்னவெமை நினையாது நடந்தனையோ
வேதாவுந் திருமாலும் வேண்டுதல்செய் இபமுகத்து
நாதாவென் றவனைநணு கினையோபே ரம்பலமே! சு

[த்து
முத்தமிழை வளர்த்திடலால் முனிவனென்றே புகழ்ந்துரை
நித்தமும்யாம் நினைத்தொழுது நின்புலமை நினைந்தேத்தக்
கைத்தலத்துக் கனியெனவே கருதுசொற்குப் பதம்விளக்கும்
வித்தகனே! யுத்தமனே! விமலாபே ரம்பலமே! எ

கோலஞ்சேர் மாடநிரை குலவியொளிர் வண்ணைநகர்
ஆலஞ்சேர் மிடற்றானை அணிக்வியாற் றுதித்தவுனைக்
காலஞ்சா துயிர்கவரக் கருதுவனோ கருதானேல்
சூலஞ்சே ரிறையடியோ சூடினாய்பே ரம்பலமே! அ

செந்தமிழ் நூற்கடலுண்ட திறனார்நற் றிருமணியே!
அந்தமில்நற் புகழுடைய அன்புருவே! அருமணியே!
எந்தமர்தம் கண்மணியே! என்னிதயக் குருமணியே!
வந்தமிர்தம் தருவாயே வளர்பேரம் பலமணியே! கூ

பேரம்ப ல்வன்பாதம் பேணிக்கோ ணுமலையென்
பேரம்ப லவனடியான் பெற்றெடுத்த பேறேநற்
பேரம்ப லம்புகழ்ந்து பேசுமுரை வெறுத்தோநீ
பேரம்ப லவனடிசேர்ந் தணைந்தாய்பே ரம்பலமே! கய

திருச்சிற்றம்பலம்.



யாழ்ப்பாணத்து வேலணையூர்

# ஸ்ரீமத். பேரம்பலப்புலவர்

அ வ ர் க ள்

சிவபதமடைந்ததைக் குறித்து

அறிஞர் சிகாமணிகள்

கூறிய

## செய்யுள்கள்.



## பாடினோர்.

திரு: க. சோமசுந்தரப் புலவர்,
— நவாலியூர்.

பண்டிதர் திரு: செவ்வந்திநாத தேசிகர்,
— கரணவாய்.

பண்டிதர் திரு: க. கிருஷ்ணபிள்ளை,
— தும்பளை.

பண்டிதர் திரு: பொன்னம்பலபிள்ளை,
— மூளாய்.

பிரமஸ்ரீ. நவநீத கிருஷ்ண பாரதியார்,
— மாவை.

பண்டிதர் பிரமஸ்ரீ. ப. சிவானந்தையர்,
— பன்னாலை.

பண்டிதர் திரு: கா. பொ. இரத்தினம்,
— வேலணையூர்.

திரு: வை. இராமநாதன்,
— வண்ணை.

திரு: பே. கனகரெத்தினம்,
— வேலணையூர்.

திரு: கா. பொன்னையா,
— வேலணையூர்.

திரு: ஆ. தில்லைநாதபிள்ளை,
— சரவணையூர்

திரு: ச. மஹாலிங்கம்,
— வேலணையூர்.

நவாலியூர்,

## ஸ்ரீமான். க. சோமசுந்தரப்புலவர் அவர்கள்

சொல்லியது.

### நேரிசை யாசிரியப்பா.

நயனில் கூற்றே! நயனில் கூற்றே!!
வடுநீங்கு சிறப்பின் நடுவ் ணீயெனும்
கொடுவினை புரிந்தனை நயனில் கூற்றே!
மீதன்முகம் பிலிற்றுந் தெய்வத் தாமரை
௫ நான்முகன் குயிற்றும் நானில வளாகத்து
முன்மொழி முட்டையும் வெயர்வையு மென்று
பின்மொழி கொட்டையுங் கருப்பையு மென்று
பாற்படு நான்கும் நாற்புற ஞக
ஆறே ழிரட்டி னூறு யிரமும்
௧௰ வேறுவே றெழும் ஏறிழி திரையா
ஆழு மூக்கு மேழ்வகைப் பிறவிக்
கருங்கட ணீந்திப் பெருங்கரை யடைதற்
கிரும்புணை யாகிய பெரும்பெறல் யாக்கை
அரிதரி தென்பர் திருநெறி யாளர்
௧௫ அதனினு மரிதே அறிவொடு படுதல்
அதனினு மரிதே இறைமுதற் றுணிதல்
அதனினு மரிதே அவன்புகழ் பாடுதல்
ஆமென வறைந்தனர் வாய்மொழிப் புலவர்
அரியன யாவு முரிமையிற் பெற்றே
௨௰ தோன்றிற் புகழொடு தோன்றுக வென்ற
சான்றோர் மொழிக்குத் தகுமிலக் காகி
நன்னலஞ் சிறந்த பொன்னிலங் காபுரி
மன்னுயாழ் நகரின் வாழ்விழி யென்னும்
பாலணை வளஞ்சேர் வேலணை வந்தோன்

உரு கார்வள்ஞ் சிறக்கு மேர்வளச் செல்வன்
சீரியல் செஞ்சடை நெடிய வனருளக்
கூர்மதி நெஞ்சுடைக் குறியவன் கொண்ட
செந்தமிழ்த் தீங்கடற் றுறைதொறும் பருகி
பைந்தமிழ்ப் பாப்பொழி நந்தா மேகம்
நூய ஒருமருப் பிருசெவி மும்மத நால்வாய்
ஐங்கரக் கடவு ளன்னிந்தருள் வழங்கத்
திரட்டிய செழும்பொரு ளிரட்டைமணி மாலையும்
வண்ணச் சிறுமதி வார்சடை வண்ணே
அண்ணற் கரும்பொருட் சிலேடை வெண்பாவும்
நூரு நண்ணூற் புலவர் நனித்தன ரயப்
பண்ணூற் றெழுகப் பாடிய புலவன்
அன்பு மருளும் பண்பெனக் கொண்ட
செம்புலச் செல்வன் சிவநெறிக் குரிசில்
நாவல நயந்த பாவலர் விளக்கம்
சய புண்ணிய நீறு சண்ணித்த மேனியன்
தொக்க தீதறுக்கு மக்கணி மார்பன்
சிருறு ஞானத் திருமணிப் பெயர்கொளும்
பேரனே யுடைய நேர்புக ழாளன்
சிரம் பலத்துச் சிவன்கழல் மறவாப்
சரு பேரம் பலப்பெயர்ப் பெருமகன் றன்னை
ஊர்நடு நின்ற பழுமர முதலே
வேரற வெட்டும் சீரிலர் போல
யார்க்கும் பயன்றரு மியாக்கையி னீக்கி
யார்க்கும் இன்னு வியற்றினே யாதலின்
ருய கொடுவினே புரிந்தனே யாதி
நயனில் கூற்றே ஞாலகொந் திடவே.



கரணவாய், ஆரியதிராவிட பண்டிதர்

## திரு. செவ்வந்திநாத தேசிகர் அவர்கள்

சொல்லியது.

---

### நிலைமண்டில வாசிரியப்பா.

சேணுயர் குன்றமுஞ் செழுமரக் கானு
மாணுறுங் கழனியு மலிதிரைப் பரவையு
முரிய செவ்வியி னுறுவளஞ் சுரத்தலின்
மருவிய திருவெலா மலிதரப் பெற்றவ்
ரு. வும்பர்தம் பதியையு முத்தர குருவையு
மிம்பரி னுறழுவ தீழமா நாடே
யாங்கு,
வெறிகம டாமரை வியன்மலர்ச் செல்வியு
மறுவறு மியல்சால் வண்டமி ணங்கையு
க0. மகமிகு முவகையி னரைசுவீற் றிருப்பது
பகர்வருஞ் சீர்த்தியாழ்ப் பாணநன் னகர
மாங்குத்,
தடமலர்ப் பொழிலுந் தண்புனல் வாவியுங்
கடவுள்ர் கோயிலுங் கல்விக் கழகமுஞ்
கரு. செல்வர்தம் மனையுந் திருமடத் தொகுதியு
மல்கிப் பொலிவது தொல்லைவே லணையூ
ராண்டை,
வண்மைகொள் வேளாண் மரபிற் பாற்கடற்
றண்மதி யென்னத் தலைமையிற் றோன்றிப்
உ0. பண்புசால் பேரம் பலவனற் பெயரை
விண்புகச் செய்த விறற்பெருந் தோன்றல்!

வண்டமிழ்ப் பாவெனும் வளங்கெழு மாரியிம்
மண்டலங் களிக்க வழங்கிடுங் கொண்டால்!
பொறையும் வாய்மையும் புரைதீ ரொழுக்கமு
உரு. நிறையுஞ் செல்வமு நேர்ந்திடுஞ் செம்மால்!
நில்லா யாக்கையி னிலையினை யுணர்ந்தநின்
பொல்லாப் பிரிவைப் புந்தியிற் புகுத்திய
தெருளிற் சிறந்த செந்தமிழ்ப் புலவரும்
பரிவிற் சிறந்த பரிசனத் திரளு
நய. நெஞ்சகப் புணர்வு நேர்ந்தநட் டாரும்
விஞ்சிய கவ்வையிற் றஞ்செயன் மறந்து
தண்டமிழ்ப் பாவின் றனிச்சுவை யின்பமோ
கொண்டலங் கண்டனைக் கூடுபே ரின்பமோ
சிறந்ததென் றுணரவச் செஞ்சடைப் பெருமா
நரு. னுறைந்திடு முலகிடை யுற்றனை கொல்லோ
கருமு டிகப்பிரான் கழலிணை பழிச்சத்
திருவா ரவன்பதஞ் சென்றனை கொல்லோ
மண்ணகப் புலவரின் வலனெலாம் படுத்தினி
விண்ணகப் புலவரின் விறலுங் காண்பலென்
சய. றுண்டுப் புக்கனை கொல்லோ வெனநினைந்
தீண்டுப் புலம்பி யிரங்கலு நோக்கா
தியாண்டுப் புக்கனை யியம்புமதி விரைந்தே.

---

துமபளை, மதுரைத்தமிழ்ச் சங்க பண்டிதர்

## திரு. க. கிருஷ்ணபிள்ளை அவர்கள்,

சொல்லியன.

---

### நிலைமண்டில வாசிரியப்பா.

சீர்பெறு வேலணைச் சிறந்த வேளாண்குடி
ஏர்பெறு மரபினி லுதித்துத் தமிழ்நல
மோங்கி யுயர்ந்த வுத்தம குணத்தோய்!
புலவரை யிறந்த புகழ்சா ரேறன்றல்!
ரு. நின்னைப் புரைப்பி னியல துணர்தியோ?
நுண்ணுணர் வுடையார் நுனித்தறிந் தின்புறும்
வண்ணச் சிலேடை வெண்பா வன்றியும்
இடம்பல கற்றோ ரேத்தி மகிழ்செயுங்
கடம்ப ரந்தாதி யின்னன பாடி
கய. நிலவரை யெங்கும் நீள்புகழ் பரப்பி
இன்னையென் றிரங்கி மன்னே கூறிக்
கலைஞர் கையறு நிலையினை யெய்த
மெல்ல வந்துன் னல்லடி பொருந்தி
யிதென விரக்க விட்டனை நின்னுயிர்
கரு. இத்தகை யீத லியற்றினை யாதலின்,
நின்னைத் துறந்தே மல்லேம் நீயே
யெண்ணித் துறந்தனை யென்றல் சாலும்
புண்ணிய முதல்வநீ போந்த வதனால்
கண்ணினீர் கொண்டு கலுழ்ந்தனம் பலரே.

## கட்டளைக் கலித்துறை.

இலங்கைத் துவீப மியற்றிடு நற்றவத் தாழிதன்னித் [வா!
திலங்கைக் கொடுதூய்ச் செனித்திட் டதமிழ்ப்பே ரம்பல
விலங்கைத் தயல்கைத் தெமக்கைத் துயருங் குழுவினைக்கைத்
திலங்கைத் தெனவிடுத் தேகினை யீசனிணையடியே. உ

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இனித்தமி ழினிமை யாவ ரெடுத்திசைத் திடுவர் மன்னோ
தனித்தமிழ்ப் பாடல் வல்லாய் தாய்மொழி தயங்குஞ் சொல்லோ?
நுனித்தமிழ் நுண்டார் நம்மை நொய்ம்மையில் மறப்பார் தாமோ
குனித்துயிர் வாங்கிச் சென்றான் கூற்றனுங் கொடையினாலே. ௩

---

சுளிபுரம் விக்ரோறியாக் கல்லூரியில் தமிழ்ப் பண்டிதரா

யிருந்தவரும் சித்தருமாகிய,

### ஸ்ரீமத். பொன்னம்பலபிள்ளை அவர்கள்

சொல்லியன.

---

## கட்டளைக் கலித்துறை.

பேரம் பலவ னடியிணை போற்றிப் பெருமையுடன்
பேரம் பலவன் புகழ்பா டியா தரித் தேத்தியசீர்ப்
பேரம் பலமே எமைப்பே துறவிடுத் தேயகன்று
பேரம் பலவ னடிசேர்ந் தணைந்ததென் பேசுவையே. க

மண்ணு லகப்புல வர்குறை வுற்று ரெனநினைந்து
விண்ணு லகப்பு லவரொ டுபொருதச் சென்றனையோ
மண்ணு லகில்பெற் றவுன்றன் மறுவறு கீர்த்தியெலாம்
விண்ணு லகில்விளங் கக்கண் டனையோ விளம்புவாயே. உ

அரிதே யினிநின் னினியசொற் கேட்டலெ மக்கதினும்
அரிதே திருவுடை நின்னூ னயமுணர்ந் தேசுவைத்தல்
அரிதே திசையெட் டுநின்புகழ் கூற லதினுமரி
தரிதே யுனைப்போற் புலமை யுடையா ரவனியிலே. ௩

அகத்தி யனில்லை அருந்தமிழ்த் தொல்காப் பியனுமில்லை
சகத்தி லுயர்புல வோர்மதிக் குநற்கம்பனில்லை
இகத்தி லுயர்புகழ்ப் பேரம் பலவனு மில்லைபினி
சகத்தி லினிய தமிழை வளர்ப்பவர் தாமெவரே. ச

## வெண்பா.

அடைந்தாய் சிவபதம்நீ யென்றறிந் தேயாங்கள்
அடைந்த துயரறையப் போமோ—உடைந்த
மனமுடைய ராய்வா ழுவெம்மைவிட் டெங்கே
மனமுவந்து சென்றாய் மதி. ரு

யாழ்ப்பாணம்,

பரமேஸ்வரக் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்

பிரமஸ்ரீ. நவநீத கிருஷ்ண பாரதியார்

அவர்கள் சொல்லியது.

---

## நேரிசை யாசிரியப்பா.

சேஎ யிழந்த தாயினும், சேய்தன்
தாஎ யிழந்த தகையினுங், கொழுநனை
இழந்த பெண்டினும், விழைந்த பெண்டினை
இழந்த கொழுநற் கியைபெருந் துன்பினும்
ரு. பூவலய மெல்லாம் பொதுவறப் புரக்குமொரு
காவலன் பிரிந்த காசினிக் கவல்வினும்
பாவலன் பிரிந்த பரிவுறு பிரிவே
ஆற்றற் கரிய வருந்துய ரென்ப
ஆகலின்,
கய. புலவர் மரபிற் பொருந்திய புலவ!
பாவலர் மரபிற் பற்றிய பாவல!
சீரார் வண்ணைச் சிலேடைவெண் பாமுதற்
பாரோர் போற்றும் பலநூற் கொடையினை
சூலணை வளைவயல் வேலணை யூரினை
கரு திருந்து பேரம்பலன் திருவடி பேணிய
பொருந்து பேரம்பலப் புலவநிற் பிரிந்து
யாங்ஙனந் தமிழ்மக ளாற்றும்
ஓங்கு கடலாடை யுடுத்தவுல கிடையே.

---

பன்னூலை
மதுரைத் தமிழ்ச்சங்க பண்டிதர்

## பிரமஸ்ரீ. ப. சிவானந்தையர்

சொல்லியன.

---

### நிலைமண்டில வாசிரியப்பா.

மாக்கடல் வளைஇய வளாகத் தொளிரும்
பரிதியிற் பல்புகழ் படைத்தோன் மன்ற
பேரம் பலமெனும் பெருமை சால் புலவ!
தென அதுபடு குன்றத் தீந்தமிழ் முனிவன்
ரு. பகருஞ் செந்தமிழ்ப் பனிக்கடல் பருகுபு
நண்ணிய அறிவிற் றிண்ணிய னாகி
விழுமிய மேதையோர் உளமகி ழெடுப்ப
பூத்தன் ருல்நின் பொருவில் புகழே
அதனல்,
கய. குறைவறு தவச்சீர், கெழுமி யாங்கு
மக்கட் பிறப்பின் வருபயன் கொளீஇ
மிக்க வராதல் மேதை யோராதல்
என்ருங் குலகோர் இதயங் குறிக்கொள
நின்று நிலவிய நின்பெரும் புகழே
கரு. மீனினந் தொகுபுடன் விளங்கினும் விண்ணின்
வான்மதிக் கன்றி மற்றுநனி மிளிரா
வள்ளால் நின்குல மாட்சி மற்றதுவே
மாற்றலர்க் கென்றும் வன்கண் ணுடையை
போற்றினர்க் கருளும் அன்பு மாகுவை
உய. இன்ன இடும்பை யென்றிடு மிரவலர்
பின்னேர் கடைசெலா வண்ணமாற் றினையே
அன்னவை நின்புகழ்க் காதலுமன்றே

அகழ்வார்த் தாங்கும் நிலமெனப் பெரிதும்
இகழ்வார்ப் பொறுக்கும் இன்தக வுடையை
உரு. வம்பலர்ப் போற்று மாட்சியும் செம்பொன்
வரைபுணர் தனுவென வளர்த்தோர்க் கன்பும்
திருமிகப் படைத்த இருநிதிக் கிழவன்
தன்னக நாணுத் தருநிதி யுடையை
வதரிக் கானம் மருவிய சித்தி
நூ௰. விநாயகர்க்கீண்டு மெய்யன் பதனல்
இரட்டை மணிமாலை யெனும்பிர பந்தமும்
புனைந்துநற் ருெண்டு புரிதலு முடையை,
திருமிகு வண்ணச் சிலேலடை வெண்பா
மாலை யென்னும் மற்றெருரு நூலும்
நூரு. அரிதபக் கற்ற அறிஞர் புகழ்தர
புனைந் தேயுகந்து புவிவாழ் வுற்றனே,
அதனல்,
நின்செயல்யா வையும் நீணிலம் புகழ்தர
ஒண்ணுமோ வுனைப்பிரிந் துய்குவ மோவென
புதல்வரும் சுற்றமும் புன்கண் ணுடைத்தாய்
ச௰. தனித்தனி யிருந்தனர் தளர்ந்தா குலிக்க
நில்லா வுடலின் நிலை கண்டனையோ
வல்லாளனையே வான்புகுந் தனையே

## கட்டளைக் கலித்துறை.

விண்ணாட் டவர்க்கு விருந்தாவதொன்று விழைந்தனையோ
மண்ணாட் டவர்தம வாழ்வுஃபாய் யாமெனும் வன்மையொன்ருே
கண்ணாட்ட மூன்றுடை யோர்க்கன்பு காணும் கடுநசையோ
எண்ணாட்ட மற்றெது பேரம்பலவா வெடுத்துரையே.

தண்டா மரைநிகர் நின்முகச் செவ்வியும் தாரணிந்த
திண்டோ ளழகும் திருகுங் களிற்றின் செறிவலியும்
கண்டோர் களிக்கும் சிறுநகை தாமினிக் கண்டுகண்டு
உண்டோ மனங்களிகூர் பான்மை யைய வுலகினிலே.

புலவரவர்களுடைய தௌகித்திரரும்.
யாழ்ப்பாண ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்க
பண்டிதரும்
மூளாய் சைவப்பிரகாச வித்தியாசாலைத்
தலைமை யாசிரியருமாகிய
## திரு. கா. பொ. இரத்தினம் அவர்கள்
சொல்லியது.

---

### நிலைமண்டில வாசிரியப்பா.

விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகத்துக்
குன்றுதலை மணந்து குழூஉக் கடலுடுத்து
நன்னீ ரருவி பன்னூறு மன்னிக்
கொண்டல் கண்படும் தண்டலை கொண்டு
ரு. வளநீர்ப் பண்ணையும் வாவியும் மலிந்து
நிலத்துள பொருளும் கடலுள பொருளும்
சாலைப் பொருளும் மலைதரு பொருளும்
அரியவும் பெரியவும் நெரிய வீண்டிப்
பொருகடன் ஞாலம் ஒருங்குடன் வரினும்
கய. வழங்கத் தவாஅ வளத்த தென்றே
பூமலி கற்பகப் புத்தே ணாட்டொடு
எண்டிசை போற்றும் ஈழநா டதனில்;
அமரர் கோமான் அமர்ந்திடு நகரும்
கம்பர் புகழ்ந்த அம்புவி நகரும்
கரு. என்னே ராமிதற் கென்றழிந் திடவுயர்ந்து
கொலைவன் முதலை நிழல்பற் றியிர்க்கும்
குண்டுகண் ணகழி மண்டிச் சூழ்ந்த
யாழொடு பெயரிய நீணக ரோர்பால்;
செந்நெல் கன்னல் மன்னிய கழனியும்

௨௰. திரளைப் பண்ணை வீழில் தாழை
பச்சிலைக் கமுகு நெட்டிலை வாழை
காருட ேனாங்கிய சீருடைப் படைப்பையும்
வெயினுழை பறிபாக் குயினுழை பொதும்பரும்
ஓங்கிய கண்டலும் தேங்கிய நறையுடை
௨௫. மாமலர்ப் பகன்றையும் தேமலர் அடம்பும்
எங்கும் நிறைந்து எழிலுட னிலங்கும்
பொங்குதிரை பொருத வார்மணற் கரையும்
தெண்டிரை யுடுத்த தீம்புனல் மடந்தை
மண்டிக் கிடந்த மாண்புடைக் கேணியும்
௩௰. பால்வேறு தெரிந்த நால்வேறு தெருவும்
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்
தொழில்பல செய்யும் பழிதீர் மாக்கள்
மல்கி வதியும் பல்வேறி ருக்கையும்
விட்புலஞ் சென்ற மேனிலை மாடமும்
௩௫. இன்னன பிறவும் மன்னி யின்னும்,
அஞ்சொல் நுண்டேர்ச்சிப் புலவர் புகலவும்
செல்லா நல்வளம் பல்கிக் கருவி
மாரி குன்றினும் வாரி பொய்ப்பினும்
வாழுந ரோம்பும் வேலணையூ ரதனில்,
௪௰. ஒழுக்கந் திரியா விழுச்சீ ரோங்கிய
பலர்புகழ் குடிதன் பண்பு மேம்படிய
பிறைமுடிக் கண்ணி யிறையடி மறவாக்
கோணு மலையார் பேணிச் செய்த
அருந்தவப் பயனே! பொருவறு தோன்றல்!
௪௫. பேரம் பலம்போற்று பேரம் பலமே!
தொல்லிசை பலவுறு நல்லிசைப் புலவோய்!
பொதிய மால்வரைப் பதிய னருளிய
அமிழ்தினு மினிக்குந் தமிழெனுஞ் சலதி
படிந்து பருகி இடித்து மின்னித்
௫௰. தண்பணை யுடுத்த தமிழ்நா டெங்கும்
உன்னக் கேட்கப் பன்னத் தெவிட்டாச்
செந்தமிழ் பெய்த நந்தமிழ் மேகமே!

நவையில் காட்சிச் சுவையுடைச் சொல்லோய்!
நூன்முறை பயின்ற நுண்மை சாலறிஞர்
௫௫. எண்ணிப் போற்றும் வண்ணச் சிலேடை
வெண்பா வன்றியும் கண்ணுதல் பயந்த
கரிமுகச் செல்வன் திருவட் டினிலங்க
இரட்டை மணிமாலை இயற்றிச் சூடிய
கற்றவர் வியக்கும் நற்றவப் புலவ!
௬௰. ஊன்றுசால மருங்கின் ஈன்றதன் பயன்கொடு
பல்லோர்ப் புரந்த செல்லாச் செல்வ!
இருணிற முந்நீர் வளை இய வளாகத்துப்
புரையுந ரில்லாப் புலமை யுடையோய்!
நின்னை,
௬௫. முற்ற வுணர்ந்த முதல்வ னென்கோ!
எங்குலம் விளக்கிய திங்க ளென்கோ!
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோன்றன்
திருவடி மறவாப் பெருமா னென்கோ!
நல்லோர்ப் புணர்ந்து அல்லோர்த் தணந்த
௭௰. நல்லோ னென்கோ! வல்லோ னென்கோ!
வண்மையுந் திண்மையும் உண்மையுந் தண்மையுங்
கொண்டு விளங்கிய புண்ணிய னென்கோ!
அருளு மன்பும் பாருயி ரோம்பும்
திருவும் நிறைந்த பெருமா னென்கோ!
௭௫. மாயிரு விசும்பிற் பாயிருள் சீக்கும்
வெங்கதிர்ச் செல்வன் றன்செயல் போலெம்
மனவிரு ளிரித்த தினகர னென்கோ!
திருந்து மொழிப்புலவர் அருந்துதே னென்கோ!
நல்லதன் நலனுந் தீயதன் தீதும்
௮௰. மன்னுயிர்க் குணர்த்திய மன்ன னென்கோ!
முத்தமிழ் வளர்த்த முனிவ னென்கோ!
இல்லோர் தமக்கு நல்பொருள் கொடுத்து
நல்வாழ் வளித்த செல்வ னென்கோ!
கோடைக் காலத்துக் கொழுநிழ லென்கோ!

அரு. ஞான நன்னெறி நல்வரம் பெண்கோ!
எத்திறத் துயர்த்ினும் அத்திறத் துயர்ந்து
சொல்லச் செல்லாப் பல்லிசை படைத்தோய்!
நிலையா யாக்கையின் நிலையினை உணர்ந்து
மன்னு வுலகில் பன்னிய புகழ்நிறீஇ
கூ0. உயர்ந்தோர் உலகம் நயந்துசென் றனையே
அதனால்,
நீர்வார் கண்ணர் தொழுதுனை நினைந்து
வருந்தினர் ஊரோர், வருந்தினர் நண்பர்,
வருந்தினர் கேட்டோர், வருந்தினர் யாவரும்
கூரு. நயனில் கூற்றின் பயனில் செயலைச்
சிறந்தவு வமையால் திறமுடன் விளக்கி
வைதனர், வாடினர், செய்வகை யறியார்
திருந்திய செந்நா விருங்கலைப் புலவர்;
புலம்பி யயர்ந்து கலங்கிக் கையற்றுத்
ா. துன்ப மெய் பகன் தோற்றங் கண்டு
அருந்துய ரடைந்து வருந்தினள் தமிழ்மகள்;
நகைநில வெறிக்கும் முகமதி காணாது
புதுமரப் பாவை பொறியற் றாங்கு
செய்வகை யறியாது ஆரனு ருற்றார்
ாரு. தாணிழல் வாழ்க்கை மன்னிய தமரெலாம்;
ஆசா கெந்தை யாண்டு ளனென்று
தீமுகத் திட்ட மெழுகிற் றேம்பியும்
தாய்முகத் தியாத்த கன்றிற் புலம்பியும்
இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாது
ா0. ஏமஞ் சாரா விடும்பை யெய்தினர்
பெருந்தவத் துதித்த அரும்பெறல் மக்கள்;
மாரி யிரவில் வாரி தன்னில்
கலங்கவி ழுவதறைற் கலங்கினர் போலப்
புலம்பு கொண்டு கலங்கினேன் யானே;
ாரு. அதனால் அத்தை நின்னுடன் கழித்த
நாள்போற் கழியா ஞாயிற்றுப் பகலே.



யாழ்ப்பாணம்,

வண்ணை: ஸ்ரீ: வை. இராமநாதன் அவர்கள்

சொல்லியன.

---

## விருத்தம்.

திருவணையும் வேலணையூர் செய்ததவ
மோருருவே செறிந்த தேய்ப்ப
வுருவணையு மாசிரியன் பெரும்புலவ
ணுயிரத்தெண் ணூற்றின் மேலே
மருவணையு மைம்பதொடெட் டேனமேவுஞ்
சகவருடம் வண்ணை மீது
குருவணையுஞ் சிலேடைவெண்பா குரிசில்பே
ரம்பலவன் கொடுத்தான் மன்னே. க

## கலிவிருத்தம்.

முந்தி னித்தது முப்பிணி தீர்சுதை
பிந்தி னித்தது பாமகள் பேசுயாழ்
தந்தி னித்ததி ரண்டையுந் தாக்கிமேல்
வந்தி னித்தது வண்ணைச்சி லேடையே. உ



புலவரவர்களின் கனிஷ்ட புதல்வர்

# ஸ்ரீமான். பேர. கனகரத்தினம்

அவர்கள் சொல்லியன.

---

## கட்டளைக் கலித்துறை.

பேரம் பலநிதிக் கோணேச வள்ளல் பிறையணிந்த
பேரம் பலமுடைப் பெம்மானைப் போற்றிய பேறதனுற்
பேரம் பலத்தினுஞ் சொல்லாடும் வன்மை பெறுமெனையா
பேரம் பலமெனும் பேரறி வாளநிற் பெற்றனனே. க

## எழுசீர் விருத்தம்.

சைவசித் தாந்த சாகர மாங்கந்
தப்பிள்ளை சார்பினு மக்கட்
குய்வையுய்த் தருணற் கலைவல கனக
சபையெனு மோசனின் பாலுந்
தெய்விகக் கல்வி தெளிவுறக் கற்றுச்
சீரியோ ரவைமணி விளக்கஞ்
செய்திடுந் திறனுர் பானுவே! சிறியேன்
றெருளுறக் கலையருள் பிதாவே! உ

இஞ்சிசூழ் வண்ணைச் சிலேடைவெண் பாவே
யிலங்கையங் காட்டமர்ந் தடியார்
சஞ்சித மரித்தாள் விநாயக ரிரட்டைத்
தனிமணி மாலையுங் கடம்பன்
செஞ்சொலா ரணிகொள் யமகவந் தாதி
செப்பியின் னும்பிற நூலும்
விஞ்சையா னிசைத்த விளிவிலாப் புகழார்
வித்தக னுகுமெந் தாயே! ங

முனைவனும் வதரித் திருவனத் தளிசேர்
மொய்ம்புடை விநாயகற் கன்பால்
தனைநிக ரிரட்டை மாமணி மாலை
சாற்றியே புனைந்தமேற் செயனின்
வினைவழி யுற்ற தொய்வுரோ யதனை
வேரொடும் வீட்டிய தென்னே!
எனையரு ளொடுபெற் றெனதுவெண் மதிக்கு
மியைந்தநற் கலைகடந் தவனே! ௪

சொன்னயம் பொருளைக் காதிய வணியார்
தோமினின் கவித்திறங் கண்டே
சுன்னையம் பதியார் குமார சுவாமிச்
சொற்கவிப் புலவனு மேன்மை
மன்னிய சைவத் தேசிக னமசி
வாயனுங் கலைகள்வல் லானும்
நன்னயத் தன்பு பூண்டுமே புலவ
னும்பட்ட நல்கின ரன்றே. ௫

உயர்குடிப் பிறப்பே யொழுக்கநற் கீர்த்தி
யோதிமேற் பேறெருங் குற்ற
சயமக ணிருத்தஞ் செயும்புய னேரில்
சார்பிலர்க் கசனியே றன்னன்
தயவுகூர்ந் தேழு தீபமும் புரந்த
தனியதி காரமுத் தைய
நயகுண மணிய காரமன் முதலோர்
நயப்பவாழ் வுற்றவெந் தாயே! ௬

நண்ணிய வின்சொல் பொறுமையே யடக்க
நாமலர் வாய்மையோர் வண்மை
தண்ணிய நடுவு நிலைமை கண் ணோட்டஞ்
சார்ந்தவர்ப் புரந்தருடகையோ

டெண்ணிய பிறவு மியைந்தசற் புருட
ரத்தினஞ் சோமசுந்தரப் பேர்ப்
புண்ணிய மணிய காரனுற் பரிசிற்
பொலன்றரப் பெற்றவெந் தாயே! எ

தந்தையே! தனைய ராகுந் தமியோர்க்குத்
தகுதியின் படிகலை தந்துஞ்
சிந்தையினருளோ டில்லறத்திருத்திச் சேயிழை
மகார்க்குநல் வரனை
மந்திரத் தவையின் மறைப்படி மணப்பித்
தவர்தரு மகார்கண்டு மகிழ்ந்த
அந்த நற் பலங்கை வந்ததா
னீயு மரன்பத மடைதனிச்சயமே. அ

## கட்டளைக் கலித்துறை.

திக்கெட்டு மார்புகழ்ப் பேரம் பலமெனுஞ் சீர்கொளத்தன்
மக்கட்குஞ் சுற்றத்தவர்க்கு நட்டோர்க்கு மனத்துயருய்த்
திக்கட்டுவந்த கண்டாமொழிப் பாவையிட மருவு
முக்கட் பிரானடி முன்னியுற்றுன் முப்பகைமுனிந்தே. கூ

வைத்திய நாதனருளா லிலை டனன் மக்களுய்ய
வைத்திய னுமந் தனக்கேல வாயுண் மறைக்கலைதேர்
வைத்திய நாதன் மனனுருமன்பை மறந்துயர
வைத்திய னுட்டெனைப் பேரம் பலவர்ம னைந்தனரே. ய



புலவரவர்களுடைய மாணவரும் நண்பருமாகிய

வேலணையூர். சோதிட அறிஞர்

## ஸ்ரீமான். கா. பொன்னையா அவர்கள்

சொல்லியன.

---

### கோச்சகம்.

பேரம் பலப்புலவா! பீடார்நின் கல்விகொண்டு
சேரம் பலமெங்குஞ் சிறப்படைந்தே மந்நாளில்
நாரம் புனைவேணி நம்பனடி யுற்றனையேல்
ஆரன் பொடிந்நா ளறிவையெமக் கூட்டுவரே. க

வேலணையின் கீழ்பானல் விண்மணியுற் றேகதிரி
ஞாலணையு மாரிருளை யட்டெனவே நின்கலையின்
பாலணையு மாமதியிற் பாற்றியெம துள்ளிருளை
வேலணைகை யானைபத மேற்பாலிற் பட்டனையே. உ

நெறியுடைய. பெரியவர்க ணிதம்பரவும் புகழானே
அறிவுயர்த்து கலைபலநின் றன்பாலே யுணர்ந்தவத்தாற்
செறியுமிந்து சாதனத்தே சிலவரைந்து புகழுடைந்தேன்
வறியவர்க்கு வழங்குகா வள்ளல்பே ரம்பலமே. ந

பானுப் படிபடியில் பண்டிதராஞ் சுன்னுகத்
தானுக் குமாரசாமிப் புலவராசி பெற்றாய்
வானு வளத்தால் வருநிதிகொண் டோம்பியறம்
நானுத் தடுமாற நடந்தாய் நற்பாவலனே, ச

கந்தர்மடத் தடியிலன்று கலைவல்ல பண்டிதர்கள்
சந்தம்மிகுந் திடநீயுஞ் சாற்றியசுற் கவிநோக்கிப்
புந்திமகிழ்ந் தேயுன்னைப் போற்றியகண் டேயுவந்தேன்
அந்தமிலாப் புகழுடைப்பே ரம்பலமாம் புலவோனே. ௫

தீராக் கருமமெலாந் தீர்க்கவுனைத் தானழைத்து
நேராக் கொடுபோந்து நோக்கியே மகிழ்ந்தார்
ஏராக் குறுவளங்க ளேந்தியுய ரொப்பில்லாச்
சீராக்கு நம்வேலணைத் தீபச் சீரியரே. ௬

வாணிவதி நாவுடைய மன்னவனே யன்புடையேன்
பாணிவிதிர்த் தேயுடலம் பதைபதைத்து நொந்தயர்தல்
பேணிநீயோர் வார்த்தை பேசாதே பூவிடுத்து
வேணிசேர் முடியுடைய விமலனடி மேவினையே. ௭

காவன்றைப் பொன்னையனுன் கதறியிரங் கல்கண்டும்
மாவத்திர மலர்ந்து வார்த்தையொன்றுங் கூறுமல்
பூவின்மே லாசை வெறுத்தோ புலவரருள்
பாவின்மே லாசையுறு பண்ணவன்றாள் பற்றினையே. ௮

பார்தாங்கு சேடன் படமணிதான் பாறிற்றோ
கார்தாங்கு வான்முகிறுன் கதிதப்பி வழுவியதோ
ஏர்தாங்கு சற்சனர்த மெழிற்சபை தானிறந்ததுவோ
பேர்தாங்கு மெம்முடைப்பே ரம்பலநின் பிரிவென்னே ௯



சரவணை,

# ஸ்ரீமான். ஆ. தில்லைநாதபிள்ளையவர்கள்

இயற்றியவை.

---

## நேரிசை வெண்பா.

ஆர்வயுவ வாண்டுபுரட் டாதியறு மூன்றுவெள்ளி
பூர்வபக்க சத்தமிமூ லம்புகல்சீர்ப்—பேரம்
பலப்புலவன் றேகமொரீஇப் பன்னிமய வல்லி
வலப்புலவன் றாளடைநாண் மற்று. க

## ஐம்பத்தறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

சீரே றிலங்கா துவீபவட மாகாண
சிரமென விளங்கி யளகை
தெற்கிலுள தோவெனத் தக்கயாழ்ப் பாணமென்
றிருநகர வதிமருங்கிற்
சேர்ந்துசை வாலயம் வித்யால யங்கடிரு
வோடுறீஇச் சைவ மோங்குந்
தேயமாஞ் கிக்கல்வி செல்வமிக மல்கித்
திகழ்ந்தரா சாதி காரஞ்
சேர்நிலைய மாந்திருத் தருவங்க ளாதபாற்
கந்தோர் சிறந்த தலைமை
திகழுத்தி யோகர்வாழ் மாடமா ளிகையழகு
செய்திட வருங் கரும்பு
தெங்கரம் பைகடின கரன்வா ஷினுக்கழகு
செய்ததென வோங்க வேசெற்
செய்கரும் பாடவி யெனத்தக்க வேலணை
கிழக்கில் வாழ்ந்திட்ட குவளைத்

தாரேறு புயராம லிங்கர்கோ ணமலைச்
　　சதுரனெழின் மண்டை தீபந்
தன்னில்வரு சேதுகா வலமுதலி தந்தசெல்
　　லத்தம்பி பேர்த்தி யாஞ்சீர்
தந்தசிவ காமிமின் றன்னைமண மாற்றியே
　　தாம்புரியு மில்ல றத்தின்
றக்கபல மீதெனப் புக்கவர்கள் பிள்ளையாய்ச்
　　சார்ந்துபே ரம்ப லப்பேர்
தாங்கியே கலையறிவு தேங்கிமின் னாழகு
　　தனிலிருவர் மதன னென்னத்
தக்கபரு வத்திலே முருகவுடை யார்வழியி
　　லாறுமுக முதல்வ னீந்த
சாலிநேர் பெரியநாச் சிப்பிள்ளை தன்னைவேட்
　　டாற்றறத் தாற்ற னக்குத்
தானிணை யெனத்தக்க குணமழகு கலைவன்மை
　　தருசபா ரத்தி னேந்தல்

பேரேறு திருவிருவ ரோவெனும் பத்தினிப்
　　பிள்ளையெனு மிவர்க டம்மைப்
பெற்றுவாழ் நாண்மனைவி யிற்றிடப் பின்னரெழில்
　　பெறுபெரிய தம்பி யீந்த
பெருமைபெற் றிட்டவே லாயுதர் தருந்திருப்
　　பெண்ணரசி வள்ளி யம்மைப்
பிள்ளையை மணந்துசிவ பாக்கியந் தந்தையைப்
　　போல்வந்த பிள்ளை யென்னப்
பெறுகனக ரத்தினத் தோடுதங் கம்மாவெ
　　னிவர்களை மிகுந்த வன்பிற்
பிள்ளைக ளெனப்பெற்று நன்கு கற்பித்துமுன்
　　பெற்றநல திரும கற்குப்

பெண்ணுக நல்லதம் பியர்மகண் மனேன்மணிப்
பிள்ளையை மணம்பு ரிந்து
பின்பத் தினிப்பிள்ளை வாஞக நற்கார்த்தி
கேசர் பொன் னம்பலமெனும். க

பாரேறு மாபெருந் தனவந் தனைத்தந்து
பின்புசிவ பாக்கி யப்பேர்ப்
பைங்கிளி தனக்குச் சிதம்பரப் பிள்ளைசுப்
பிரமணிய மாய மேன்மை
பற்றுமரு மகனைவேட் டேகனக ரத்தினப்
பண்டிதனி னரிய மனையாப்
பகரவே வர்த்தகச் சுந்தரம் பிள்ளைநல
பண்பொடு பயந்த சீலப்
பாக்யலக் குமியெனும் பூமாதை வேட்டபின்
பன்னுதங் கம்மா வெனும்
பண்புள்ள பெண்ணைமேற் பகர்சுந்த ரம்பிள்ளை
பாலனுஞ் சுப்ர மணியம்
பாரியென முறையே மணஞ்செய்து வைத்தபாக்
கியசாலி யிவர்ப வுத்ரப்
பான்மையோர் பெயர்முதல வுள்ளசில வேறுபின்
பாவினி லுரைப் பாமரோ. உ

கலி வெண்பா.

பேரம் பலமெனுமின் னோர்பேரப் பிள்ளைகளா
மாரன் பினர்பெயரே யாதி சொல்லிற்—சீரிற்
குலவுகுண பூஷணமே கோதறுமுன் மைந்தன்
அலகில் புகழ்மகள்பே ராகு மிலகுகலைப்
பண்டிதராம் ரத்தினமு மாங்கிலவின் றுட்ஸ்படிப்பைக்
கொண்டநட ராசாவுங் கூறரிய—தண்டமிழுக்
காசா னெனுந்தியாக ராசாவு மற்றுமகன்

றேசார் சிவபாக்ய லக்குமியும்—மாசாதென்
பாலசுப்ர மணியமுமே பத்தினிப்பிள்ளைப் புதல்வி
சீலமுற்ற பிள்ளைகள்பேர் செப்புகுணஞ்—சால
வருசீர் மனோன்மணியே மற்றைமகன் பிள்ளை
தருசீர்ப் புனிதவதித் தையலருநீர்மை
தந்த திலகவதி சண்முகநா தன்னிவர்கள்
பிந்து மகடருசீர்ப் பிள்ளைகளேல்—வந்தவிவர்
பேறென் சிறிதோ பெரிதே யுடற்பிறப்பாய்
வீறொன்ற வந்தவரோ விள்ளரிய—மாறிலரு
நாகமுத்துப் பிள்ளைதெய்வ யானை நவிறரிய
பாகார் சொல் வள்ளியம்மை பார்ப்பதியென்—வாகார்ந்த
வின்னோர் திருவருசீ ரெய்துநல்ல தம்பிகலை
துன்னறிவார் வேலாயுதத்தோன்றல்—பண்ணியசீர்
முத்துத்தம் பிக்குரிசின் முன்னென் வயித்யலிங்க
வித்தகவேள் சண்முகப் பேர் மேவுமணி—வைபத்தநல
வாக்கிற் குருவாய் வருசங் கரப்பிள்ளை
தேக்குகலை நல்லெழிலார் சின்னையா—நீக்கமிலா
அன்பார் மருமக்க ளாவாரேல் நின்சீர்த்தி
யென்பா வலர்க டமக்கேறே—பொன்போன்ற
வாக்கென் பெறுமெவரும் வாயார மெச்சிடுமுன்
தூக்கென் பெறுமளவில் சுந்தரனே—தேக்குகுணக்
குன்றேயின் சொல்லின் குடியிருப்பே கோதகன்றோர்
மன்றேயு நாயகமாம் மாமணியே—நன்றேயென்
றுள்ள வியற்றி யுலகுமெச்ச வாழ்ந்துபுகழ்
கொள்ளப் பிறந்தபெருங் கூடமே—விள்ளரிய
கல்விப் பொருளீட்டிக் காதலுடன் வாழ்ந்ததனல்
நல்வித் தகப்புலங்கொ ணல்லோனே—வெல்விசைய
னன்னவபி மான மடைந்து தருமனென
மன்னப் பொறுமைமுதல் மாகுணங்க—ளின்னலுற

வந்தகா லத்துமின்னு மற்றையர்க்குச் செய்யாத
புந்தியுள நல்ல புனிதனே—யந்தியன
மெய்ய னியலறிந்து மேதகவா கப்போற்றி
வைய மதிக்கவுற்ற மாதவனே—செய்யதிருப்
பிள்ளைகளைப் பெற்றுப் பிரிய மிகவளர்த்து
விள்ளரிய கல்விசெல்வ மேவுவித்தே—தள்ளற்
கருமணங்க ளாற்றிவைத்தே யாதரவாய்ச் செய்ய
திருமணக்க விங்கிருந்த செல்வா—பொருவரிய
சுற்றமெலாந் தஞ்சிரத்திற் சூடும் மணியெனவே
பற்றுவைத்து வாழவுற்ற பண்பனே—மற்றையருக்
கில்லாத கீர்த்தி யிருக்கவந்த பேடகமே
கல்லாதார் கூட்டுறவில் சண்ணியனே—நல்லார்தந்
நேயா புலவனென லைச்சுமக்க நீயெடுத்த
வோயா முயற்சிசற்றே வுத்தமனே—மாயமதாம்
பொய்யுடம்பு போனாலும் புக்ககல்வி யேழ்பிறப்பும்
ஐய வுதவுமென்று ரான்றவவ—ருய்வடையச்
செய்யுங் கலைகல்விச் செல்வனே நீயதனிற்
கைவீந் ததனாற் கருத்தொன்றி—மைவந்த
கண்டன் றனைப்பதியாக் கண்டு கருதுதிருத்
தொண்டைப் புரிந்து தொழுதுபத்தி—கொண்டிங்கு
வாழ்ந்துவந்துங் கஞ்சவிலை மன்னிய நீர் போன்றுலகில்
வீழ்ந்தா ழுறுதறிந்து மெய்பொயெனல்—சூழ்ந்தாய்ந்து
கண் கூடாய்க் கானலொத்தல் கண்டுவர்த்து மெய்ப்பதியாம்
பண்கூடு மென்மொழியாள் பங்கனருட்—கண்கூட
நோக்கிப் பொடிபூசி நோன்றுளெம் பூரணனை
யாக்கி மனத்தகத்தே யைந்தெழுத்தை—வாக்காரச்
சொல்லித் துதித்துத் தொழுதுபுடை துன்னியுள
நல்மக்கள் மாமருகர் நாடுறவோர்—புல்லியசீ
ரார்பேரப் பிள்ளைகளே யாதியய னட்பினராய்ச்

சார்வோர் மனங்கலங்கிச் சஞ்சலிக்கப் பேர்போய
தேக மொரீஇ யெழுபா ணைந் துவய சென்னவரு
ளாக னருள்பெற் றகமகிழும்—பாகமுற
பேரம் பலநற் சிவபதம் பெற் றீசனருள்
வார மிகமகிழ்ந்தான் மற்று. ௩

## கட்டளைக் கலிப்பா (மடக்கு.)

செப்பு சீர்ச்சிவ காமிமின் பாலனே
திருவ ருந்திரு நீற்றணிப் பாலனே
தப்பி லாதுய ரைவருக் கத்தனே
சாலு மேல்வள மாங்கலை யத்தனே
யொப்பி லாமரு கோர்களின் மாமனே
யோது சாதுரி யச்சொலின் மாமனே
யெப்பொ ருட்கு மிறைவனைப் போற்றியே
யின்ப டைந்தனை யோவைவர் போற்றியே. ௪

பன்னு பேரம் பலமென் புலவனே
பரியு மாதிக்கு முள்ளம் புலவனே
துன்னு பொன்னெனத் தோன்றிய மெய்யனே
துகளி லாதுசொல் கின்றநல் மெய்யனே
மன்னு மீசனை வைத்தவுள் ளத்தனே
வந்த வைவரைப் போதுமுள் ளத்தனே
யின்னு மிப்புவி நற்புக ழேந்தலே
யியையு மோகினைத் தான்றரித் தேந்தலே. ௫

## சிரேட்ட மகன் கூற்று.

## அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தந்தாய் தவத்தாற் றனயனெனத் தந்தாய்
தந்தை செயத்தகுவ

தெந்தா யிதென் றறிந்தபடி யியன்ற
வரையிற் புகட்டியதை
மைந்தா வினிய தருகளிறே மகனே
தம்பீஇ யெனவழைத்த
வெந்தா யேநீ யிறந்தாயே வினியார்
தம்பீஇ யென்பாரே. சு

அந்தோ தம்பீஇ தம்பீஇயென் றழைத்துத்
தழும்பே றுன்னுவை
வந்த வெழுநா வுளதீயோன் மாந்த
வதைக்கேட் டுற்றசெவி
மந்த மடைய விங்கிருக்க வைத்த
மறையோன் றீயெழுத்தை
யெந்த நாளோ யான்நீரி லெழுத்தாக்
குவதெ னெந்தாயே. எ

அந்தோ துரும்பா லடியாம லடேயென்
றழகற் றழையாமல்
வந்தா தரவா யிருகண்போல் வளர்த்து
மகிழ்ந்த மாதவமார்
தந்தாய் நின்னை வெள்ளைநிலாத் தவழ்செஞ்
சடையெந் தற்பரனை
யெந்தா யிறையே நற்பதத்தி லிருத்து
வாயென் றிறைஞ்சுதுமே. அ

வேறு (போது).

உத்தமமா நற்குணமுங் கற்பியலு
மறச்செயலு முலவிமேலாம்
வித்தகமார் கிளிமொழியு மனநடையு
மயிலொயிலு மேவி வாழும்

பத்தினிப்பிள் ளையுஞ்சிவபாக் கியமுந்தங்
கம்மாவு மென்றே பன்னும்
புத்திரிகள் மிகவருந்திப் புலம்பவிட்டுப்
பிரிந்ததென்ன புலவ ரேறே. ௬

தேக்குசுவைத் தேன்மொழியும் மான்விழியுங்
கான்குழலுஞ் செம்மை மேவு
மாக்காவின்பூ வானனமு முளமருகி
மனோன்மணிப் பிள்ளையும் பின்னுன
பாக்கியலெக் குமியுமெனப் பன்பலினிக்
கொடிபோல் வார் பைத லோடும்
ஏக்கமுற வகன்றனையோ தூக்கெனச்சொன்
மழைபொழிந்த வெழிலி யேறே. ௧௰

ஆரைமறந் தாலுமரைக் கணமேனு
மகலாம லன்போ டுன்றன்
சீரையுரைத் திருந்துதொழும் பெவற்றினையு
மகிழ்சிறப்பச் செய்து துன்பாற்
காரைநிகர் நீரதனைக் கண்சொரியு
முதல்மகனைக் கருணைப் பேர்த்தி
யாரையுமோ மறந்திறந்தாய் சொல்லரும்பே.
ரம்பலமா மழுகிற்கில்லே ௧௧

வேறு.

சீரம் பலந்தேன் சருக்கரை
கண்டமுதா தியினுந் தித்திப்பில்
வாரம் பலம்பெற்றிடு கவிதை
வழங்கி யிருந்த விப்புலவப்
பேரம் பலமிற் றிடிலவர்க்கா
றிசையக் கவிசெய் பெற்றிகலைச்

சாரம் பலம்பெற் றவர்விண்வாழ்
புலவர்க் கெனினுஞ் சாற்றரிதே. ௧௨

கற்றார் குழுமும் கிழக்கூர்மேற்
கூரி லெவருங் காவாப்பேர்
பெற்றாய் புலவ னாயிரத்தி
னொருவ னெனலாற் போதனை
மற்றார் பெறுவர் செயற்கரிய
செய்வார் பெரிய ரெனும்வாக்குக்
குற்றா யிலக்கா யிற்றாலு
முடம்பொன் றழியா துன்றனக்கே. ௧௩

கணிய மிலகக் கைக்கூலி
யொளிக்க வெழுதி பங்காக்கு
மணியஞ் சோம சுந்தரமாம்
வள்ளல் மகிழ்சீட் டுக்கவிதை
யணியி னியலிற் பாடியவர்
பொற்கா சளிக்கப் பெற்ற பெரும்
புணிய மிருந்த புலவரியார்
போம் பலமென் புகழ்மலையே. ௧௪

இலத்தைக் காட்டுச் சித்திவிநா
யகரி னிரட்டை மணிமாலை
நலத்தைக் காட்டுந் திருவண்ணைச்
சிலேடை வெண்பா நன்மணமார்
வலத்தைக் காட்டுந் தோட்கடம்ப
ரந்தாதிகளால் வழுத்தியிறை
பலத்தைக் காட்டும் படிபாடி
யுள்ள நினக்கென் பாடுளதே. ௧௫

தேமாங் கனியென் சுவைப்பெயரோய்
கனியுங் கனியாந் திருவமைவோர்
பூமா தெனுமிவ் வகலிடத்தே
பொருந்தல் மிகவு மரிதரிது
நாமா மகளீ தறிந்தேயோ
கவியின் சுவையை நன்களித்தாள்
ஆமா றதனை யறிவாரா
ரந்தோ நின்பே ரழகழகே. கசு

## வினுவுத்தர நேரிசைவெண்பா.

விண்ணவர் பே ரென்கீர்த்தி மேவுபெய ரென்னெழிலி
நண்ணுபெய ரென்சுவண நற்பெயரென்—புண்ணியத்தாற்
பேர்நலவ ரென்றெவரும் பேசுமிவர் தம்பெயராம்
பார்புலவர் பேரம் பலம். கஎ



வேலணையூர் விதானையார் புதல்வர்
ஸ்ரீமான். ச. மஹாலிங்கம் அவர்கள்
சொல்லியன.

## வெண்பா.

காவலனும் விண்ணிற் கடவுளரு மெச்சுதரப்
பாவலனும் பேரம் பலமடைந்தான்—நாவலூ
ரந்தணருக் காப்பரவை யாரினகஞ் சென்றபத
வந்தணரு நீழ லகம்.

செம்பதும நேர்வதனஞ் சேரும்பே ரம்பலவேள்
சம்புபய செஞ்சரணந் தான்புகுநாள்—நம்பியுவ
கன்னிமதி மூலங் கலைவளருஞ் சத்தமிசேய்
கன்னிமகிழ் வெள்ளியெனக் காண். உ

## இரட்டையாசிரிய விருத்தம்.

சீரேறு வேலணைப் பேரேறு பதியிலுறு
செல்வ வேளாளர் திலகன்
திருவேறு திண்புயன லுருவேறு மங்கசன்
செய்ய கோணுமலை மகன்
வாரேறு கொங்கையொடு காரேறு பைங்கூந்தல்
மன்னு சிவகாமி மைந்தன்
வலமேறு புயனின்மொழி நலமேறு மபிமானி
வண்சபா ரத்தி னற்கும்
கூரேறு புத்திகலை யேரேறு வித்தைகுடி
கொள் கனக ரத்தினற் கும்
குணமேறு பத்தினிப் பிள்ளைமுதன் மூன்றிலகு
கோற்றொடிச் செல்வியர்க் கும்
நாரேறு தந்தைபல பாரேறு சாத்திரம்
நன்கோது பேரம் பல
நாமமுள செம்மல்கண நாதாரகர வென்ன
நம்பனுவ குற்றன ரோ. ௩

## வெண்பா.

செந்தண்மை பூண்டவன்மன் செய்யாள்சேர் மார்பன்மன்
வந்தண்மை யின்வாய் மலர்வன்மன்—முந்திளமை
தன்னிற் பலகலைக டாம்படித்த விற்பனன்மன்
மன்னியபே ரம்பலமா மன். ச

கம்பனுமிங் கில்லைக் கவிகாள மேகமில்லை
யம்புவியோர் போற்றுபே ரம்பலமே—சம்படியர்
தம்புகழைச் சாற்றுந் தகைசேக் கிழானுமில்லை
யுன்புகழை யார்மொழிவா ரோது. ரு

நேர்மைபொறை வாய்மை நிறைமான மோர்ப்பறிவு
கூர்மைபெறு புத்தி குடிகொண்ட—சீர்மைசால்
பேரம் பலமே பிறங்குதமிழ்ப் பாவலவிந்
நேரம் பிரிந்ததென்னோ நீ. சு

வண்ணைச் சிலேடைவெண்பா வொன்றில் வரியொன்றில்
நண்ணப் புணர்த்தவொரு நன்மொழியே—திண்ணமா
நின்கலையை நின்னறிவை நின்கருத்தை யொண்கரத்தின்
மென்கனிபோற் கட்டி விடும். எ

சன்மானஞ் சாந்தந் தயைநீதி தண்ணளிசால்
நன்மானி பேரம் பலநல்லோன்—பொன்மானம்
வந்துற் றிடக்கணர்கள் வாழ்த்தவிவர்ந் தம்பரார்பூச்
சிந்தப்போய்ச் சேர்ந்தான் சிவம். அ

எண்ணிலங்கைக் காட்டிலுறு மீசன் கரிமுகத்தெம்
பண்ணவனுர் மேலேயோர் பாமாலை—நண்ணிசைத்தேன்
சொட்டச் சொட்டப்பாடுந் தூயாநீ பந்தமெலாம்
வெட்டிக்கட் டிப்புகுந்தாய் வீடு. கூ

வாணுளிற் பாதியெலா மன்னுவிதா னைத் தொழிலைக்
கோணும லாற்றுமெந்தன் கோனுடனே—மாணுக
மட்டி லிதமாக வாய்மலருஞ் செய்கையதைத்
தட்டியதே யூழாந் தறி. ൰

கோச்சகம்.

நாடுகின்ற தவப்பயனுய் நண்ணுசபா ரத்தினமும்
பாடுகின்ற கவிவன்மை பயில்கனக ரத்தினமும்

வாடுகின்றார் மயங்குகின்றார் மனங்கசிந்து புலம்பியுனைத்
தேடுகின்றா ருனதுமகார் தெரிந்திலையோ பாலகனே. ௰௧

இலக்கணமு மிலக்கியமு மெச்சமின்றிக் கற்றுணர்ந்தே
நிலக்கணிடை யாசிரியர் பண்டிதரா நிலையிலுறும்
வலக்கணுறு மணியெனநீ மதிக்குமிரத் தினப்போன்
அலக்கணுற விட்டேக லறிவேயோ பாவலனே. ௰௨

சாதலுற்றா யென்றமொழி தஞ்செவிக்கட் புக்கவுடன்
ஓதலுற்ற புலவரெலா முட்கிமனம் வாடுகின்றார்
காதலுற்ற மக்களெலாங் கரைந்துகரைந் துருகுகின்றார்
வீதலுற்ற மெய்யகன்று வீடடைந்த பாவலனே. ௰௩

கன்னத்தங் கரியமறை கறைமிடற்றோற் குரைகுகன்மேற்
பன்னத்தம் படக்கவிதை பகரியற்பே ரம்பலநின்
மன்னத்தங் களமேய்க்கு மருகிசின்னப் பிள்ளைதுயர்
அன்னத்த னொருவேளை யறிந்துரைக்கு மளவினனே.



கொழும்பு, சகிருக்கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பண்டிதர்

திரு. மு. நல்லதம்பி அவர்கள்

சொல்லியன.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

திருவீற் றிருந்த வேலணையாஞ் செழிய
பதியின் மேழியினன்
மருவீற் றிருந்த வளம்பொலிய வளரும்
வேளாண் மாபெருந்தோன்
அருநூற் றமிழின் பெருஞ்செல்வ மரிதிற்
றேடி யதுநுகர்ந்து
பெருநூற் புலமை யுடையனெனுப் பெரியார்
வாழ்த்த விளங்கினின்றோன். ௧

கந்தப் பிள்ளைப் பேராசான் களிப்பச்
சைவத் தவநெறியின்

முந்திச் சென்று பாவன்மை முகிழ்ப்ப
முகிழ்ப்பப் பலபாடல்
தந்திப் புவியிற் பாவடிவிற் றகுநூன்
மூன்று படைத்துமகிழ்
வுந்தப் பெரும்பே றுடையோனு யுயர்ந்து
நின்ற வுரையாளன்; உ.

சிரம் பலவன் திருத்தாள்கள் தேடி
மகவு கிடைக்கவருள்
கூரெம் பெருமா னெனப்பெற்றூர் குறைநின்
றிரப்பக் கொடுத்ததனுற்
பேரம் பலவ னெனவிடுதற் பெயர்கொண்
டோரார் கூடுகின்ற
பேரம் பலத்து நடுவோனுப் பிறங்கி
நின்ற பேராளன்; ௩

பாண்டித் தியஞ்சேர் பண்டிதனுப் பாரில்
விளங்கு மிரத்தினனை
யீண்டைப் புலமை மிகுந்தோனு யிருக்க
வென்று சிறுவயதிற்
காண்டற் குகந்த நூல்கள்பல காட்டி
நல்ல வழிநடத்தி
மாண்டக் கவரி னிடையிருக்கும் வளத்தை
யளித்த மாண்புடையான்; ௪

ஏழு பத்தோ டைந்தென்ன வியம்பு
மாண்டு புவியினிடை
வாழ்வு பெற்றுப் புகழுடலை மற்றிங்
கெமக்கு மகிழ்ந்தீந்து
தாழ்வில் கடப்பந் தார்முருகன் தண்டா
மரைத்தா ளவைவேண்டி
வீழ்வின் றுயர்ந்து நின்றனுல் விளங்கிப்
பொலிக வன்சீரே. ௫

முற்றும்.